சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீஞானாம்பரநததீர்த்தசாரணையம்மே.

---

# சித்தாந்தஞானபோதம்

## துகளறுபோதம்

மூலமும் உரையும்.

---

அருளிச்செய்தவர்

சீகாழிச் சிற்றம்பலநாடிகள்.

இதற்கு

“வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்”

ஸ்ரீலஸ்ரீ

சோமசுந்தரநாயகரவர்களது

மாணவகரும்,

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதரும்

ஆகிய

நாகபட்டினம்

வேதாசலம்பிள்ளையவர்களால்

புத்துரை செய்யப்பட்டு,

[illegible]

[illegible]

சிவமயம்.

---

சிற்றம்பலநாடிகள் செய்தருளிய நூல்களும்; ோல் அவரது அடியார்கள் செய்த நூல்களும் இ பலவுள. அவற்றைப் பின்னர் வெளிப்படுத்துவாம்.

திருச்சிற்றம்பலம்.

---

ேவ.

யுளை மெடுத்துக் காட்டுதலானும், இத்துகளறுபோத வாசி-
யர், உமாபதி சிவாசாரியா ரருளிய திருவருட் பயனிலுஞ்
"தாடலைபோற் கூடியவை" எனு முவமையைத் தந்நூ-
"சாற்றிலதற்குவமைதாடலைபோல்" எனவெடுத்தருளு-
ளும் இந்நூல் சற்றேறக்குறைய நானூற்றைம்பது வரு-
கட்குமுன் னியற்றப்பட்ட தென்ப தினிது விளங்கும்.
நூல் இத்துணைப் பழையதா யிருத்தலான் இது சந்-
குரவர் கருத்தை யினி தறிந்திருக்கு மென்பதற்கு
யர் சிவஞானசுவாமிகள் "அகாரவுகார மகங்காரம் புரு-
எனுஞ் சிவஞானபோதச் செய்யுளுரையினும் "அவ்வுடை-
என்னுஞ் சித்தியார் உரையினு மிதைச் சிறந்த பிரமாண-
மெடுத்துக் காட்டி யிருப்பதே சரியுரைக்கு மென்பது.

இத்தகைய அரியபெரிய நூலை யச்சிடுவித்தற்கு விரும்-
பிப் புகுந்தனாயினுங் கடையேனாகிய வெளியேனையு மெய்ப்-
பொருளாகக் கருதிச் சித்தாந்த சைவ வுணர்ச்சியை
ய்துவித்த எனது ஞானாசிரியராகிய ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர-
யரவர்கள் இந்நூற்பயிலு மாணவர்க்குத் துணைக்கருவி-
யிருக்குமாறு சுருங்கிய வுரையொன்று எழுதி யச்சிடு-
தல் உதவியாயிருக்குமென்று கூறி "மகாபாணப் பிரயோ-
கத்திற்கு முயலைப் பிலக்காக வைத்தது" போல எனை-
யவ்வாறு செய்யுமாறு கட்டளையிட்டருளினார்கள். இத-
யான் எத்துணையு மருகனல்லனாயினுங் கட்டளையை மறு-
தற்கஞ்சி அவர்களது திருவடித்துணையையே பற்றுக்கோ-
கக்கொண்டு இவ்வுரையெழுதினேன். இதனைப் பெரியோர்
சிறுகுழவியின மழலைமொழி போல்வதெனக் கொண்டு ஏ-
ற்குமாறு அவர்களது திருவடித்தாமரைகளைச் சென்னி
சுமந்து வேண்டிக்கொள்ளுகின்றேன்.

இந்நூலுரை யெழுதுதற்குக் கிடைத்த மூலப் பிரதி-
கள் இரண்டே. இவ்விரண்டிற்குஞ் சில பாடபேதங்களிருந்-
தாலும் பொருட்சிறப்புடையதாயும் இன்னோசை பயப்பதா-
யுமுள்ள பாடங்களையே தழீஇ யுரை யெழுதினேன். புன்-
றலை நாயினேனையு மிம்முயற்சியிற் புகுத்தருளிய அம்பல-
வாணன் திருவருளைச் சிந்தித்து வந்திக்கின்றேன்.

இங்ஙனம்,

நா. வே.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுருப்யோநம:.

---

# சித்தாந்தஞானபோதம்.

கப்பட சார்

## துகளறுபோதம்.

துகளறுபோதம் என்பது துகள் அறுதற்கேதுவாகிய போதம் எனவிரியும். துகள் என்பது மலம்; போதமென்பது அறிவு அல்லது ஞானம். எனவே தொல்லைமலம் அறுதற்கேதுவாகிய ஞானம் எனப் பொருள்படும். எண்டர்ந்த ஞானத்தைப் பயக்கும் நூலுக்காயினமை காரியவாகுபெயர். துகளறுபோதம் அடையடுத்தவாகுபெயர்; (ரசகம் என்பதுபோல.

காகா தீப்பர்

### பாயிரம்.

நேரிசைவெண்பா

பதிபசு பாசந் தெரிந்தந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேறாய - கதியுற்று
மெய்கண்டான் சந்தான மேவிச் சிவானந்தம்
கைகண்டார் பாரார் கரு.

(இதன்பொருள்) பதிபசுபாசங்களை தெரிந்து அவற்றுள், பாசத்தினாலாய ஊழ்வினையை வெல்லுவித்து வீட்டைப் பெரிதுங் கூட்டும் மெய்கண்ட சிவத்தின் வழியைப் பொருந்துபவர் சிவானந்தத்தை எளிதிற் பெறுவர், மறித்தும் பிறவியெய்தார்; எ - று.

இதுமுதன் மூன்றுசெய்யுள்களுஞ் சிறப்புப்பாயிரங் கூறியவெழுந்தன. என்னை? பாயிரங் கூறாக்கால், நூல்நுதலிய பொருள் விளங்காதாகலானும், இந்நூல கற்றுவல்ல ஆன்றோர் மதத்தைத் தழீஇயதோ எனவும் முனைவனூலொடு முரணுவதோ எனவும் பலவாற்றான் ஐயநிகழ்ந்து மாணாக்கர்க்கு ஊக்கஞ் செல்லாமையானும் அது ஒருதலையாலுணர்தல் வேண்டுமென்பது. தெரிந்து, வென்று

(இ - ள்.) மண்ணின் றொழில் வலியுடன் எவற்றையுந் தாங்குதலும், இதன் காரியம் மயிர் என்பு முதலியனவும், பிற வலியபொருள்களுமாம்; எ - று. உரம் - வலிமை, கண்ணுதல் - கருதல். (௪)

நீர்க்குயிராய் நின்றே நெகிழ்ந்து குளிருமே
பார்க்கினீராதி பகர்கருமங் - கார்க்குரிய
வெள்ளமுத லாதியுமா மெய்யுணரி லப்புத்தா
னள்ள விடப்படா தாம்.

(இ - ள்.) நீரின் றொழில் நெகிழ்தலும் தண்ணெனலும் நெருக்கப்படாமையுமாம், முகிலீற்றரப் படுவதும் அதுவேயாம்; எ - று. கார் - முகில், அள்ளுதல் - நெருங்குதல். (௫)

வன்னிக் குயிராகி வந்துசுட் டொன்றுவிக்கும்
பன்னுபசி யாதி பயில்கருமம் - மன்னும்
விளக்காகிப் பந்தமாய் வேறாக நிற்குந்
துளக்கமிலாத் தேயுத் தொழில்.

(இ - ள்.) தீயின் றொழில் சுடுதலும், பசித்தலும்; அது, விளக்காகவும் பந்தமாகவுங் காணப்படும்; எ - று. வன்னி - தீ, பந்தம் - தீப்பந்தம், துளக்கம் - அசைவு.

இம்மூன்று செய்யுளினும் "உயிராய்" நின்றதென்றது, அவ்வப் பூதங்களையியக்கும் வாயுவையாம். அது யாண்டுப் பெறுதுமெனின், 'உயிராகி வந்து' என்று கூறியதில் வந்து, என்பது வாயு எனப் பொருள்படுதலானும், 'சுட்டொன்றுவிக்கும்' எனச் "செய்வீ" என்றவலாகக் கூறினமையானும், பின்னைச்செய்யுளில் 'உயிர்மருத்து' என்றமையானும், பெறுது மென்பது. இம்மூன்று பூதங்கட்கும் அகத்துருவும் புறத்துருவுங் கூறப்பட்டமை யுய்த்துணர்ந்து கொள்க. (௬)

தேடப் பிரித்துத் திரட்டுவிக்குஞ் செய்கரும
மோடன் முதலோவா வுயிர்மருத்து - நாடிலவை
யல்லவாம் வாயு வருட்குருவாற் காண்பதன்றிச்
சொல்லவா ராதே துணிந்து.

(இ - ள்.) ஓரிடத்திருந்த பொருள்களைப் பல்லாறாகப் பிரித்து அவற்றிற் குரியார் பின்றேடிக் கொண்டு வருமாறு கையரிக்கொண்டு சென்று எவையிடத்து எவையவற்றோ டொருங்கு திரட்டுதலும், ஓடல், எழும்பல், வீழ்தல், உலைதல், நிமிர்தல் முதலியனவும் வளிக்

ன்றொழில்களாம்; இதனுருவை ஆசிரியன் அறிவுறுக்கும் உபதேச வாயிலாகக் காண்பதன்றிக் கிளந்து கூறல் சாலாதாம்; எ - று. திரட்டுதல் - தொகுத்தல்; ஓவாமருத்து - இடையீடின்றி யியங்கும் வாயு.

வாயுவுக்குப் புறத்துருவமின் றென்பதூஉம் அவ்வாறாயினும் அது உற்பூதவுருவ முடைத்தென்பதூஉந் தருக்கநூலார்க்கு முடன்பாடாதல் அன்னம்பட்டீய முதலியவைகளுட் கண்டுதெளிக; "உற்பூதத்தன்மையாவது காட்சியைப் பயப்பதொரு தருமவிசேடம்."(எ)

> இரந்தரமாய் நின்றே யிடங்கொடுக்கும் வானம்
> பரந்த குரோதமுதற் பார்க்கில் - விரிந்த
> கருமமாய் வேறாகுங் காணலா முண்மைக்
> குரவனா லென்றே குறி.

(இ - ள்.) வான் எனைப்பூதங்கள் நான்கிற்கும் இடந்தந்து வெளியாய்நிற்கும்; அதுவன்றியும், குரோதமுதலாயினவு மிதன்றொழிலாம்; இனையும் வளியைப்போல ஆசிரியன் உபதேசமொழியாற் காணலாம்; எ - று. இரந்தரம் - வெளி; குரவன் - ஆசிரியன்.

இவ்வைந்துபூதங்களின் றொழில்களை "மண்கடினமாய்த் தாங்கும் வாரிகுளிர்ந்தே பதமாக்கு மொண்கனல் சுட்டொன்றுவிக்கும் ஊதுமல், வண்கால் சலித்துத்திரட்டும் பார்க்கிலாகாயம், நிரம்பமாய்நிற்கு நிறைந்து" எனும் உண்மை விளக்கச்செய்யுளானு முணர்க.

> வட்ட மறுகோண மாயாத முக்கோண
> மிட்டம் பிறைசதுர மேவுவ - மெட்டரிய
> வேதமான் மிக்க விடையோன் மகேசனுட
> னுதி யதிதெய்வ மாம்.

(இ - ள்.) வான் வட்டவடிவும், வளி அறுகோணவடிவும், தீ முக்கோணவடிவும், நீர் பிறைவடிவும், மண் நாற்கோணவடிவு முடையன; பிருதிவிக்குப் பிரமனும், அப்புவுக்கு விண்டுவும், தேயுவுக்கு உருத்திரனும், வாயுவுக்கு மகேசுரனும், ஆகாயத்திற்குச் சதாசிவனும் அதிதெய்வங்களாம்; எ - று.

'வட்டமறுகோண மாயாதமுக்கோண - மிட்டம் பிறைசதுரமே வடிவம்' என்பதை எதிர்நிரனிறையாகப் பிருதிவியாதியோடியைக்க, இன்றேல் 'மண்புனலனல்கால் வான்பால் வடிவு நாற்கோணமாகுந், தண்பிறைமூன்றுகோணந் தருமறுகோணம்வட்டம்" "நாற்கோணம் பூமிபுனல் தண்ணுமதியின்பாதி, தேயுக்குமனல் முக்கோணமெட்போது.

சத்தாதியைந்து - சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தம் இவை தன்மாத்திரை. 'எத்தாலுங்காணுமலவ்விடயங்கைகழல' என மறித்து முன்னரைத்தது, பழக்கத்தால் ஒரோர்கால் பிழைக்காமையை வலியுறுத்தற் பொருட்டாம்; இதனல் கூறியதுகூறிற்றின்மையு முணர்க. நவை - குற்றம். (கஉ)

வாக் காதி யித்துடனே நீங்கவச னதிவிடு
நீக் காத வுட் கரண நீங்குமே - தாக்கி
மனாதி முதலாக வந்தவந்த போது
தனாது செயலுணரத் தான்.

(இ - ள்.) ஞானேந்திரியங்களாகிய வவை நீங்குழியே கன்மேந்திரியங்களு முடன் நீங்கு வனவாம்; பின் வசன முதலானவை நீங்கும்; அதன் பின்னர்த்தாகிய அந்தக்கரணங்கள் மனத்தை வாயிலாகக்கொண்டு தாக்கி வருங்கால் பசுவாகிய தனதியல்லை யறிந்து அவற்றையொழிக; எ - று.

வாக்காதி - வாக்குப் பாதம் பாணி பாயுரு உபத்தம் என்பன. வசனாதி - வசனம் கமனம் தானம் விசர்க்க மானந்தம் என்பன; [illegible] வைந்து முறையே வாக்காதியின் றொழில்களென்றுணர்க. இ[illegible] றங் கூறியன [illegible]ம் புறக்கருவிகளாம். அறிதன் மாத்திரைக்கு வாயிலாதலோனுக்கு ஞானேந்திரிய மெனவும், புடைபெயர்ச்சி மாத்திரைக்கே கருவியாதலோனுக்குக் கன்மேந்திரிய மெனவுங் காரணப் பெயர் போந்தவென்றுணர்க. இனி, உட்கருவி - மனஞ் சித்தம் புத்தி யகங்காரங்கள். (கங)

## அந்தக்கரணசுத்தி.

மன்னு மகார மனஞ்செலுத்தும் புத்தியினை
யுன்னு முகார முபகரிக்கு - முன்னகு
மாங்காரந் தன்னை யகாரஞ் செலுத்தியிடு
நீங்காது சித்தம்விந்து நேர்.

(இ - ள்.) மனம், புத்தி, அகங்காரம், சித்தம் முதலிய கருவிகளோயுடனின்று செலுத்தும் எழுத்துக்கள் முறையே மகாரம், உகாரம், அகாரம், விந்து முதலியனவாம்; எ - று.

முதனூலுள்ளும் வழிநூலுள்ளும் இங்ஙனம் ஓதப்படுதலின் அருணந்தி சிவமருளிய "அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி யாங்காரங் கள்" என்னுஞ் செய்யுள் எதிர் நிரனிறைப் பொருளதாமென்க. இதுவே

ஆசிரியர் சிவஞான யோகிகட்குங் கருத்தாதல் "சிவஞானபோதச் சிற்றுரை"க்கண்ணோர்ந்து கடைப்பிடிக்க. (௧௪)

அந்தக் கரண மகல வதிற்கூடுந்
தொந்தக் கலாதித் துரிசறுமே - பந்திக்குஞ்
சித்த மயலறுத்துந் தீர வுணக்கேற
வொத்த படியே யுறை.

(இ - ள்.) கரணவினை யகல இவற்றை வேறு வேறு செலுத்துங் கலைகளால் உளதாகு மாசு விலகும்; களைக்கும் சித்தத்தின்கட் பொருந்திய மயக்கைத் தீரவறுத்த நிலையில் நின்றிடுக; எ-று.

'ஏறவொத்தபடி' எனவும் 'உரை' எனவும் பாடமுண்டு. தொந்தம் - சலஞ்சாதித்தல். 'தீரவறுத்து உணக்கேற வொத்தபடி' எனத் தனித்தியைக்க; இங்ஙனம் பொருட்கேற்பத் துணித்துரைப்பன பலவா 'மாட்டு' என்னுஞ் செய்யுளுறுப்பெனவறிக. 'அறுத்து' என்றுஞ் செய்தெனெச்சம் 'ஒத்த' வென்பதில் ஒத்தல் என்பதனொடு இயைந்தது. (௧௫)

கை

## கலாதி ஞான நிராகரணம்.

எ -

பொங்கு புலனுகரப் போதந் தருமாயை
தங்குகலை யாதி தருஞான - மிங்கிதனால்
நீங்குபடி மாணவக நின்போத மொன்றிரண்டுந்
தாங்குபடி நில்லாய் துணிந்து.

(இ - ள்.) விடய நுகர்ச்சி பெறுமாறு உயிர்க்கு அறிவை யெழுப்பு மாயையாற்றரப் படுங் கலாதி ஞானத்தின் நீங்குமாறு அறிவிச்சை தொழிலென்னு மூன்றும் வாளாதிருக்க நிற்பாயாக; எ - று.

கலையாதி - கலை, நியதி, காலம். மாணவகன் - மாணாக்கன். 'நீங்குப்படி' 'தாங்கும்படி' என்பவற்றின் மகரம் இன்னோசை பயத்தற் பொருட்டுத் தொக்கன. (௧௬)

கால நியதி கலையாதி தத்துவங்கள்
சாலவறி விச்சைதொழி றூன்பூத்தன் - மூலமா
மாயை மயக்கல் வரைத்தல் வினைக்கூட்ட
லாயவிட லாமென் றறி.

(இ - ள்.) கால நியதி கலைகளுக்கு முறையே தொழில் இச்சை யறிவுகளாம; இவற்றிற்கு முதலான மாயையின் றொழில்கள் உயிர்க்

சறிவை மயங்குதலும், அதைத் தனு முதலிய வற்றால் வரம்புப்படுத்த லும், இருவினைப் பயன்களை நுகர்வித்தலுமாம்; ஆகலான், இவை யெல்லாம் விடத்தக்கவா மென்றறிவாயாக; எ - று.

கால நியதி கலைகட்கு, அறிவிச்சை தொழில்கள் எதிர் கிரணி றையாம். (கஎ)

## சுத்த தத்துவ தூடணம்.

ஆன வதனு லழுந்தினு லாகதற்கே
னின வயிர்க்கவத்தி னெல்லைகா - ஞானமிலாப்
போகந் தருமானுற் பொல்லாதே தா புண்ணியத்தி
னாகந் துணையானுர்க் காம்.

(இ - ள்.) அறிவு விளக்கத்திற்கு ஒரு தலையாக இன்றி யமை யாததாயிருப்பினும் வைந்தவமெனும் சுத்தமாயை பரமபந்தத்திற்கு ஏதுவாயிருத்தலின் அதை பொருவாது அதன்பாற்படுதல் இழுக் குடைத்தாம்; எ - று.

'புண்ணியத்தினுகந் துணையானுர்க்காம் வைந்தவத்தினெல்லை ஞானமிலாப் போகந்தருமாறுற் பொல்லாதோகாண்' (இதுகடை) எனவும் 'ஞனமான அழுலையழுந்தினுல் அதற்கு ஆக' (இதுவிடை) எனவும் பிரித்தினும் கூட்டிப் பொருள்கொள்க. அதனுல் - அதனில் இது பொருண்மையக்கம். "வித்தைகள் வித்தையீசர் சதாசிவரொடு நின்றக்கு-வைச்சுறும் பதங்கள் வன்னம் புவனங்கள்" முதலாயின பிறவற்றிற்கு முதற்காரணமா யிருத்தல் பற்றிப் 'புண்ணியத்தினுகந் துணையானுர்க்காம் வைந்தவம்' என்றுர். 'ஈனவயிந்தவம்' என்றுடம் பொடு புணர்த்த வதனுல் அதுவும் பரமபந்தத்திற் கேதுவாமென்பது பெற்றும். இச்செய்யுளைச் சங்கையும் உத்தரமுமாக வைத்துப் பொருள்கொள்க. அங்ஙனங் கொள்ளுங்கால் 'எனின்' என ஒரு சொல் வருவித்துப் 'பொல்லாதேகாணெனின்' எனப் பொருத் தமுறு முய்த்துணர்க. (கஅ)

சுத்தவித்தை யாதிமூன்றச் சொன்னவேழ் தத்துவமு
மொத்து நடத்திவிடு மோவாமல் - வித்தைசெய
லேறிக் குறைந்தொத்த லெப்போதும் பார்த்திடவே
மாறிப் பிறந்ததுவு மாறு.

(இ - ள்.) சுத்தவித்தையாதி யாவன முன் விதந்தோதிய தத்து வங்கள் எழையும் ஒழியாமல் இயக்கு வனவாம்; வித்தியா தத்துவத்

தின் தோற்ற வொடுக்கங்களின் முறைமை யறுவார்க்குப் பலனேற் றையக் கடத்தல் கூடும்; எ - று.

சுத்தவித்தை யாதியாவன:—சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கி யம், சத்தி, சிவம் என்பன.

வித்தியாதத்துவ மேழாவன:—காலம், நியதி, வித்தை, கலை, இராகம், புருடன், மாயை என்பன. (கக)

தத்துவாதீதம்.

மண்முதலா நாதாந்த மாய்வந்த தத்துவந்தி
னுண்மையறிந் தெல்லா மொழித்தாயே - யெண்ணிலிவை
தத்துவா தீதமெனச் சாற்றுவங்காண் சைவமறை
யத்துவா வெல்லா மற.

(இ - ள்.) நிலமுதல் நாதமீறுகிய தத்துவங்கள் முப்பத்தாறன் இயல்பெல்லா முள்ளவாறுணர்ந்து கழித்த விடத்துத் தோன்றுவது, இவற்றை யெல்லாங் கடந்ததாய் அத்துவாக்களையு மிறந்ததாய்ச் சைவமறைக்கண் விளங்குவதாயுள்ள சுத்த சிவமென் றுரைப்பாம்; எ - று.

அத்துவாக்கள் - மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம் கலையென்று மாறும். மந்திரம் சோரியாகவும், பதம் நரம்பாகவும், வன் னம் தோலாகவும், புவனம் மயிராகவும், தத்துவம் என்புந் தசையு மாகவுங் கொண்டு, சாந்தியாதீதகலை திருமுடியாகவும் சாந்திகலை திரு முகமாகவும் வித்தியாகலை மார்பாகவும் பிரதிட்டாகலை குய்யமாக வும் நிவிர்த்திகலை முழந்தாளும் பாதமுமாகவும் உறுப்புடையனாய் இறையன் திருமேனிகொண்டருளுவன்; "வைத்ததா மத்துவாவும் வடிவென மறைகளெல்லாம்" என்றுஞ் சித்தியாரினு மிவ்வாறே கூறிப்போந்த தறிந்து கடைபிடிக்க. (உ0)

இப்பரிசே யைந்துசுத்தி யெய்தியதா லெப்போதுஞ்
செப்பரிய மாயாதி தீருமே - யப்பரிசே
யாங்கவற்றி னோடே யழியும் வினைமலந்தா
னீங்கவற்றோ நீங்கா நிலை.

(இ - ள்.) இங்ஙனம் ஐந்து சுத்தி யடைவார்க்கு மாயாமலப் பிணிப்பு நீங்கும்; அது நீங்கக் கன்மமலமு முடனீங்கும்; எஞ்சிய ஆணவமல நீங்குதற்கரிய நிலையுடையது; எ - று.

• ஐந்து சுத்தி - பூதப்பழிப்பு, பொறியற வுணர்தல், அந்தக்கரண சுத்தி, கலாதி ஞான நிராகரணம், சுத்த தத்துவ தூடணம் என முற் கிளந்தோதியன. 'வினை'-கன்மமலம். 'மலம்'-ஆணவமலம். 'வற்றே' என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருளது. (௨௧)

### சகலதரிசனம்.

நின்று நின்று வந்த நிலைதோறு நீயறிந்த
தன்றியவை தன்னை யகன்றாயே - யின்றிவைதான்
முத்தி படுஞ்சகல முன்னம படுஞ்சகலம்
பெத்தமது வென்றுநீ பேசு.

(இ - ள்.) அவத்தைதொறும் படிந்து அது அதுவாய் நின்ற தன்றி அவற்றை யகன்றிலையோ நீ; அவ்வவத்தைகடாமியாவை என்னையாயின், முத்திசகலம், சகலசகலம், கேவலசகல மென்பன வாம்; எ - று.

ஏகாரம் எதிர்மறைப் பொருளது ; இன்ன பொருட்டாதல் "தேற்றம் வினாவே" எனுந் தொல்காப்பியச் சூத்திரத்தில் நச்சினார்க்கினியா ருரைத்தமையாலும், ஆசிரியர் சிவஞான யோகிகள் நன்னூல் விருத்தியிலுரைத்தமையானு முணர்க. 'பெத்தமது' வென்றது கேவல சகலம் பிறப்பிற்கேதுவாதல் நோக்கி. இங்ஙனஞ் சகலம் மூவகைத்தா மாறு "இருவகைச், சாக்கிராதி யவத்தைகளியல்புதானு" மென்னுஞ் சித்தியார் செய்யுட்கு ஆசிரியர் சிவஞான யோகிகள் உரைத்தவுரை யானுணர்க. (௨௨)

அஞ்சு வகையாக வாறாறு நீத்ததற்பின்
விஞ்சிவரு மாணவத்தின் மேலீடு - வஞ்சமறச்
சாற்றிலது கேவலமாந் தான்கழித்துப் போந்தநிலை
சாற்றி லதுசகலந் தான்.

(இ - ள்.) கேவலாவத்தை யெனப்படுவது பஞ்சசுத்தியாயிலாக முப்பத்தாறு தத்துவங்களையு நீத்து ஆணவமலத்தின் மேற்படுவதாம்; அதையுங் கழித்துப் போந்த நிலையே சகலம்; எ - று.

ஆணவத்தின் மேலீடு - ஆணவத்தை யாதாரமாகக் கொள்வது.

### கேவலம்.

அன்றிவந்த தத்துவங்க ளெல்லா மகன்றிடவே
யொன்றிநின்ற வாணவந்தா னொன்றுமே - யென்றுந்தா
னீங்கா விருள்விழிபோ னிற்குமே யான்மாவும்
பாங்காக வாங்கே பதிந்து.

(இ - ள்.) ஆணவத்தின்கண் ஆன்மாநிற்கு முறைமை நள்ளிருட்கண விழிவிளக்கமறுதல்போலும்; எ - று.

அன்றிவந்த - மாறுபட்ட, இப்பொருட்டாதல் "அன்றினார் புரம்" எனவருந் திருவாக்குகளானுணர்க. இருளின்கண் விழி அவ்விருளுமாகாது அவ்விருளின் வேறுமாகாது நின்று தன்னொளி மாத்திரையே விளங்காது குன்றுதல்போல, ஆன்மாவும் அவ்வாணவமுமாகாது அதனின் வேறுமாகாது அதனாற் றன்னிச்சைஞானக்கிரியைகள் மறைக்கப்பட்டு நிற்குமெண வுணர்க. (உ௪)

பகலிழந்த வாழ்போற் பரவுமல நீயா
யிகலறவே நின்று மிழந்தா - யகலறிவு
வாடாத முத்தியினில் வாய்ந்தவருட் கேவலநீ
நாடாத கேவலமுன் னாள்.

(இ - ள்.) ஞாயிறில்லாவழி இருள்வயத்தசாமாறுபோல மிக்குநிற்குமலத்தின வயத்தையாய் நின்னறிவை யிழந்த கேவலநிலையே, இறையனருந் திருவருளினாற் பெறு முத்திநிலையை நீயெய்தாமற் செய்தற்குக் காரணமாம்; எ - று.

பரவுதல்—எல்லார்க்கும் புலனுமாறு மிக்குநிகழ்தல்; இப்பொருளைச் "சிவஞானம்பாத"ச் சிவஞானயோகிகளுரையிற் காண்க. முத்தற்கேவலம்—முத்தி. (உ௫)

கேவலதரிசனம்.

ஒன்றுந் தெரியா வொழியா விருளாகி
யின்றளவு நின்ற திறமேதா - மொன்றிச்
செம்பிற் களிம்புபோற் சேர்ந்துநின்ற வாணவந்தா
னம்புநிழல் போலெய் தறி.

(இ- ள்.) செம்புங்களிம்புப்போ லனாதியே ஆன்மாவைப் பற்றியிருக்கும் ஆணவமலம் நீரினிழல்போற் புலப்பட்டுத்தோன்றுத லின்றி யொன்றுந் தெரியா வொழியா விருளாகி யின்றளவு நின்றது; எ - று.

அநாதி சையோகத்தைத்தெரிப்பார் 'செம்பிற்களிம்பு' உவமையும், ஆணவப் புலப்பாடின்மையைத்தெரிப்பார் 'அம்புநிழல்' உவமையுங் கூறினார். நீர் தன்பால் வாழ்வனவற்றிற்கு இடங்கொடுத்த லுண்மையால் ஆண்டுவெளியுண்டென்பதூஉம், வெளியுண்டாகவே ஆண்டதற்கு நிழலுண்டென்பதூஉம் பெறுதும்; "இல்லாமுலைப்பாலும்" எனனும் சிவஞானபோதச் செய்யுளிலும் ஆசிரியர் சிவஞானயோகிகள் இவ்வாறே யுரைத்தார். அம்பு - நீர். (உ௬)

## மூன்றாமுண்மை.

ஆவது, உயிரினியல்பு கூறுதல்.

அந்த மலமா மறியாமை கண்டாயே
யந்த வறிவுநீ யையனே - தொந்திருள்
போனதே யுன்னைவிட்டுப் போக்கித் திரோதையரு
ளானதே கண்டா யறி.

(இ - ள்.) சித்தாந்தவுணர்ச்சி பெற்றதனாற் றலைமைப்பாடுடைய மாணவகனே! நீவேறல்லை, அறியாமை யென்ப தொன்றுண்டென்று எவ்வறிவினாற் கண்டாய் அவ்வறிவுதான் நீயென்றுணர்வாயாக; அற்றேலஃதாக, என்னைப்பற்றிய ஆணவவிருள் நீங்கியதாயிற் பின்னும் யான் மறைப்புண்டிருத்தல் என்னையென்பையேல், அவ்வாணவவிருளையும் போக்கி நினக்கிறையருளைப் பயப்பிக்குந் திரோதாயி சத்தியின் மறைப்பென்றதனை யறிவாயாக; எ - று.

கண்டாய் - முன்னிலையசைச்சொல்; "கேட்டையென்று" வென்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. (௰

வைத்த வதரங்க ளெல்லா முடன்வந்து
மத்தமை கண்டு மறியாயான் - முத்தனுய்ப்
பாச வறிவும் பதியறிவு மன்றியே
யாசறமே நின்றவ னீ யாம்.

(இ - ள்) முற்கிளந்த தத்துவங்களின் வழியிலெல்லாம் வந்து அவற்றி னியல்பெல்லா மறிந்தும் அறியாதாய்போலப் பேசுகின்ற மாணவகனே! நின்னறிவு என்னையெனின் மறைக்கு மியல்பினதாய பாச வறிவுமல்ல, அன்றி எவற்றையும் விளக்குமியல்பினதாய பதியறிவுமல்ல, இவ்விரண்டினும் வேறான அறிவித்தாலறியு மியல்புடையை யென்றறிவாயாக; எ - று.

ஆசு - உயிரைப்பற்றிய குற்றம்; மாசு - உடலைப்பற்றிய குற்றம்.

சைதன்யதரிசனம்.

என்பது பதிபசு பாசவியல்புகளை யாராயுந் தத்துவஞானம்; ஈண்டது பசுவாகிய தன்னியல்பறிதல்.

கண்ணிலிருள் போனதுங் கண்டன்னைக் காணுமோ
வெண்ணுமிருள் போன லெனையறிய - வொண்ணுமோ
கண்போற் சடமோநீ காட்டியதுங் கண்டறிந்த
வொண்போத நீயென் றுணர்.

(இ - ள்) கண்ணை மறைத்த இருள் கெடினுங் கண்ணானது தன்னைக் காணாதவாறுபோல என்னைப் பிணித்த ஆணவவிருள் அகன்றுழியும் யான் என்னைக் காணுதல் செல்லாதென்றெண்ணற்க, நீ அக்கண்ணைப்போற் சடப்பொருளல்லையாகலானும் இறையனார் விளக்கியாங்குக் காணும் அறிவினையாக லானும்; எ - று.

சடம் - உயிரில்பொருள். போதம் - அறிவு. (ஙஉ)

இருட்டு மொளிக்கு மிடமாகும் வான்போ
லருட்கு மருட்கு மகமாய்ச் - சுருக்கமிலா
நீசத் தசத்தன்று நேரே சதசத்த
னாய்ச்சத் ததுவசத்த தாம்.

(இ - ள்.) ஆகாயமொன்றே இருள் ஒளி யிரண்டற்கும் இடனுமாறுபோல நீயும் இறையனார் அருட்டிறத்தையும் பாசத்தின் மருட்டிறத்தையும் ஏற்குங் கொள்கலமாயினுய், ஆயின், நீ ஏற்ற அந்தச் சத்தாகிய அருளுமல்லை, அசத்தாகிய மருளுமல்லை; இருந்தவாற்றாற் சத்தாமியல்லையும் அசத்த மியல்லையும் ஒட்டி நிற்குஞ் சதசத்திலக்கண முடையை, எ - று.

இருளொளிக் கிடனுமாகாய மவ்விருளொளிக ளாகாது அவற்றின் வேறுமாகாது நிற்றல்போலச் சதசத்தெனப்படும் உயிரும் பதி பாசங்களுமாகாது அவற்றின் வேறுமாகாது நிற்கு மியல்பினதாம். வான் இருளில் இருளாயும் அது கழிந்துழித் தோன்றும் ஒளியில் ஒளியாயும் நிற்பதன்றித் தனித்து நிற்குந் தனிமைதலல்லாவாறுபோலப் பாசத்தொடு நிற்புழிப் பாசமாயும் அகன்றுழி விளங்குவதாயுள்ள சிவானந்தப் பெருஞ்செல்வத்தூட்டினைப்புழி யதுவாயுநிற்பதன்றிப் புயிர் தனித்து நிற்கு மாற்றலினதன்று. இதுவே யுயிரியல்பா மென்று கூறியவாறுணர்க. இக்கருத்தை "இருதிறனறிவுள திரண்டலாவான்மா" என முதனூல் கூறிய ஆன்மவிலக்கணத்தின்கண் வைத்துப் பரக்கக்கண்டுகொள்க. 'சத்தது அசத்தது' என்பவற்றில் அது பகுதிப் பொருள் விகுதி. (ஙங)

அறியு மறிவுநீ யன்றோ வுளக்குச்
செறியுமல நின்றதோ செப்பா - யறிவுதனைப்
பாராதே பார்த்தறிந்து பாசப் பழக்கமதில்
வாராத தன்றோ வழக்கு.

(இ - ள் ) அறிவிக்கவறியு மியல்பினையான நீ நின்னியல்பை நின்னறிவால் முனைத்துக் காணுதலின்றி இறையனார் அருள்வழிக்

கண்டு பாசப்பழக்கத்தில் பட்டுப் பிறப்பில்வாராது உளூற்றுதலன்றே நீதியாம்; எ - று.

'செற்றியமலநின்றதோ' என்பது இங்ஙன முளூற்றுவார்க்கு அது எளிதில் நீங்குமென விஞவுதன் முகத்தான் மாணுக்கனை யூக்கமுறுத்தியது. (கஉ

ஞானதரிசனம்.

ஞானமென்ப தீண்டிறையனூர் அருள். எனவே, அவ்வருளியல் பறிதல்.

அறிந்தறிந்து வந்த வவதரங்க டோறுஞ்
செறிந்தறிய நின்ற தெது தேரிற் - பிறிந்ததனை
நின்ற தறியாம னிகழ்த்தியது நீக்கியுனை
யின்றறிய வைத்தருளென்

(இ - ள்.) நீ மயக்கமதற்று மருந்திற்றெளிந்து தெளிந்து வருந்தொறும் பிரிவற நின்றுணர்த்தி வந்ததெதுவென வாராய் வார்க்கு அதுதிய யுன்னையாத்த பாசவிருளை நீக்கி யதுநீங்கிய நிலையு நீயறியாவாறு புரிந்து இன்று தன்னையுமறிய வைத்த இறையனூருளென்ப தினிது விளங்கும்; எ - று.

'அது நீக்கி அதனைப் பிரிந்து நின்ற தறியாமல் நிகழ்த்தியுனை' எனப் பொருட்கேற்ப இயைக்க. 'என்க' என்பதில் வியங்கோள் விகுதி யிகாரத்தாற்றொக்கது. (கரு)

அந்த வருளுனக்கிங் காதாரமா யல்லி
னிந்து வென வெறித்திட் டேகமாய் - முந்தி,
யுனையுனக்குத் தான்விளக்கி யோவா துணர்த்துந்
தனையுனக்குக் காட்டுமே தான்.

(இ. ள்.) அவ்வருள் நின்னுயிர்க்கொப்பற்ற கண்ணாய் நின்று இரவிருளைத் திங்கட்புத்தேள் இரித்து ஒளி விடுமாறுபோல அறிவை விளக்கி முதலாக உன்னை யுனக்குக் காட்டிப் பின் தன்னையுங் காட்டும்; எ - று.

ஆதாரம் - கண்கண். அல் - இருள். இந்து - திங்கள். எறித்தல் - பிரகாசித்தல்; "எறித்தருகதிர்" என்னுங் கலித்தொகையினும் ஆசிரியர் நச்சினூர்க்கினியார் இவ்வாறே பொருளுரைத்தார். ஓவாது - இடையீடின்றி. (கசு)

எல்லாம்பொய் யென்றிங் கிருந்தேனு நானன்றோ
நல்லா யெனையறிந்தே னென்றோ - சொல்லாடு

நான்பிரம மன்றி நடுவே யுணர்த்துதற்கு
வான்பிரம முள்ளதோ மற்று.

(இ - ள்.) நானேபிரம மாவதன்றி யென்னை யுணர்த்துதற்கு எனனின்மேலான வேறொரு பிரமமுமுளதோவென்று கூறி எல்லாப் பொருள்களையும் பொய்யென் றுரைத்துக்கொண்டிருந்த புழுத்தநாயினுங் கடையனாகிய தீயேனும் உய்யுமாறு திருவருள் பாலித்ததன்றோ?; எ - று.

ஈண்டு நூலாசிரியர், இறையனார் அருளாற்றனச்செய்திய கேடிலுதவியினியல்பை மாணாக்கற் கறிவுறுத்தார். 'சொல்லாடு நான்பிரம மன்றி நடுவே யுணர்த்துதற்கு - வான் பிரம் முள்ளதோ மற்று - எல்லாம் பொய்யென்றிங்கிருந்தேனு' எனமாற்றிப் பொருள்கொள்க. எனவே, நானேபிரம மென்றுரைக்கு நிலை பிறப்பைப் பயத்தற்கேதுவான செருக்கைப் பெருக்குதலான் அது சாலவும் வழுக்குடைய நெறியென்பது புலப்படுத்துவாராயிற்று. மற்று - வினைமாற்றில் வந்த இடைச்சொல். 'இருந்தேனும்' என்பதிலுள்ள உம்மையைப் பிரித்து 'நான்' என்பதனொடுகூட்டுக. 'நானு - எனையறிந்தேன்' என்பதில் உம்மை உயர்வு சிறப்பு; இங்ஙனமன்றி யிதை யிழ்வு சிறப்பெனக் கொள்வார்க்கு அது ஒரு பொருளினது இழிவைச் சிறப்பித்தல் எனப் பொருள்பட்டு 'எனையறிதல்' என்பது இழிவுடைத்தாய் முடியுமாதலான் அங்ஙனங் கோடல் போலியென்றொழிக; இதுவே, ஆசிரியர் சிவஞானயோகிகட்குங் கருத்தாதல் நன்னூல் விருத்தியிற் காண்க. வான் பிரமம் - மேலான பிரமம். (௫௭)

அன்றுமுத லின்றளவு மண்ணலறி விப்பதன்றி
யின்றறிவே னென்றியம்புவதே - மென்று
மவத்தை தனிலுணர்த்தி யாங்கருத்தி யின்றித்
தவத்தி லுணர்த்தினரார் தான்.

(இ - ள்.) ஆணவமலத்தினின்று மெடுத்து விட்ட காலமுதல் இம் முத்திக்காலம் வரையில் உணர்த்துவான இறைவனென்றுணர்ந்துரையாது நானேயறிவேனென் றுரைப்பது. அவத்தையி லின்பத்துன்பங்களை யருத்தி யுணர்த்தியாங்கு இன்று சிவானந்தப் பெருஞ்செல்வத்தையடைதற் கருவியான தவத்தில் புகுதவிட்டாரினைய ரென்றறிய மாட்டா மடமையேயாம்; எ - று.

தான் - அசைநிலை. 'யார்' என்னும் வினா வினைக்குறிப்பு 'ஆர்' எனமருவிற்று. இச்செய்யுள் முதலடி ஏந்திசைச் செப்பலோசைத்து. (௫௮)

உன்னறிவு நீயே புணர்வையே யாமாகி
லிந்நெடுநாட் பாசத் திலையாயே - புன்னறிவை
நீங்கா வறிவாகி நீரு மிரதமும்போ
லாங்காணரனு ரருள்.

(இ - ள்.) அற்றன்றி, நீயே நின்னறிவைக் காண்பாயெனின் இது காறும் பாசவலைப்பட்டு நீ அறிவு மாழ்குதற் கேதுவின்று; ஆதலான், உன்னறிவை விளக்குவதாயுள்ள இறையருளருட்சத்தி நீரும் அதன்கட் சுவையும் போல நின்னறிவைப் பொருந்தியிருக்கும்; எ-று.

நீரின்கட்சுவை சந் தடங்கியிடுமாறுபோல் உயி ரறிவின்கட் சத்தி பதிந்திருக்கு மென்னும் வியாப்பிய வியாபக மாத்திரைக்கே உவமை கொள்க. 'ஆம்' என ஆக்கங்கொடுத்தமையால், அருட் சத்தி அங்ஙனம் குணகுணிபாவமாய்ப் பொருந்தியும் வேறாய் நிற்குமென் றனுபவங் காட்டினாரென் றுணர்க. பாயிரத்தில் "மெய்கண்டான் சந்தானமேவிற் சிவானந்தங்-கைகண்டார் காணார் கரு" என்றுரைத்தமையால் இந்நூல் மெய்கண்டான்வழியை யொட்டியதென்பதூஉம், மெய்கண்டா னூற்சேற்பப் பொருளுரைத்தலே இந்நூற்கருத் தென்பதூஉம் பெறநின்றமையி னிச்செய்யுட்குப் பிறவாறுரைப்பார்க்குப் பாயிரத்தொடு முரணுமென்பது. அல்லதூஉம், இச்செயுட் கிவ்வாறுரை கூறுதலே பொருத்தமுடைத்தென்பது, "பண்ணையு மோசையும்போல" என்னும் முதனூலில் ஆசிரியர் சிவஞானசுவாமிகளுரைத்த வுரையானு மினிது விளங்கும். (கக)

உன்னறிவுக் குள்ளே யுணர்வா யொழியாத
தன்னறிவு தானுனக்குத் தாரகமாய் - பின்னமற
வொன்று வொழியாம லுள்ளடங்கி யுள்ளபடி
நின்று லதுவாவை நீ.

(இ - ள்.) அங்ஙன முன்னறிவைப் பொருந்திய அருட்சத்தி களைசனு அதனொடு பிரிவறவொன்றி யசனுள் வியாப்பியமா யடங்கி நின்றால் அதனானந்தத்தைப் பெறுகுவை; எ - று.

பெத்தத்தின்கட் சத்தி தன்னுளடங்கியும் முத்தியின்கண் அதனுட் டானடங்கியு நிற்றன் முறையாதலான் இவ்வாறுரைத்தார். அதுவாதல் சத்தியின் இன்பவெள்ளத்தழுட்டிளைத்தல்; அவ்வாறு திளைக்குங்கால் அதன் வயத்ததாகலன்றித் தன்னை யதனின் வேறாகப் பிரித்தறிதலின்மையான் 'அதுவாவை' என்றார். ஒன்று - செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். தாரகம் - ஆதாரம்; "வித்து

ண்டா மூலமுளைத்தவா தாரகமாம்" என்னு முதனூலினுங் கண்டு கொள்க. (சo)

இச்சை யுயிர்க்கிரங்கள் ஞான மிசைந்துணர்த்தல்
வைச்ச கிரியை வயநடத்த - விச்சயமாஞ்
சத்தியிவை மூன்றனையுந் தந்தொரு சத்திகாண்
முத்தனே பார்நீ முயன்று.

(இ - ள்.) இறையனார் சத்தியொன்றுதானே தொழில் வேறு பாட்டால் இச்சைஞானங் கிரியையென்று மூன்றுவகைப்படும்; அவற் றுள் இச்சாசத்தி உயிர்கண்மாட்டு வைத்த இரக்கமாம், ஞானசத்தி யவ்வுயிர்கட் கறிவையெழுப்புதலாம், கிரியை அவற்றை ஐந்தொழி லில் விட்டு நடத்துவதாம்; எ - று.

'வைச்ச' என்பது வைத்த என்பதன்போலி. மூன்றுமடி செப்ப லோசைத்து. (சக)

பரைதரிசனம்.

கிரியையறி விச்சை கிளர்ந்தசத்தி யேதோ
பெரியபரா சத்தியெனப் பேசாய் - தெரியிலதீங்
காரு மறியா வகண்டபரி பூரணமாய்ப்
பேரறிவாய் நிற்கும் பிற.

(இ - ள்.) அங்ஙன மூவகைப்படுவதெதுவோ வெனின், தேவ ரானும் பிறரானு மறியப்படாததாய் வரம்பிலா நிறைவுடையதாய்ப் பேரறிவினதாய் நிற்கும் பராசத்தியென் றறிவாயாக; எ - று.

தெரியில் அது ஈங்கு எனப் பிரிக்க ; "ஆறன் மருங்கிற் குற்றிய லுகர, மீறுமெய் யொழியக் கெடுதல் வேண்டும்" எனுந் தொல்காப்பி யச் சூத்திரத்தில் ஒன்றின முடித்த றன்னின முடித்த லென்பதனால் ஈண்டு அது எனு முற்றியலுகரத் துகரங் கெட்டு உயிரேறி முடிந் தது. 'பிற' - அசை. 'பெற' வெனவும் பாடமுண்டு. (சஉ)

அந்த வறிவு மறிவன்றோ விப்போது
தந்த வறிவுமது தானன்றோ - வந்த
வறிவிற் கிளைத்ததுகா ணவ்வறிவிங் கேதோ
நிறைவிற் கிளைப்பற்ற நேர்.

(இ - ள்.) அதுவே யறிவாவது, உயிர்கட் கறிவுதந்தது மதுவே, அவ்வறிவே எல்லா வுயிர்கட்கும் அறிவு கிளைத்தற்கிருந்த பராரை, அந்நிறைந்த அறிவிற் கிளையாத அறிவுமில்லை; எ - று.

பராரை - அடிமரம். (சங)

அறிவார்க் கறிவித்தங் கல்லாத தாகா
வறிவாய் விகற்ப மறியா - வறிவேகாண்
கண்பெற்றார் கண்ட கதிரொளிபோற் கண்டதனை
விண்பற்றாய் நில்லதிலே மேல்.

(இ - ள்.) அறியும் பக்குவமுடையார்க் கறிவித்து, அலலாதார்க் கறிவியாததாய் ஒருபொருளையும் விகற்பித்தறியாததாய் நிற்கு மவ் வறிவின் றகைமையே காண்! பராசத்தியாகிய அவ்வறிவைக் குருடு நீங்கியார் பகலவன் ஒளியைக் கண்டு களித்ததுபோலக் கண்டு பிரி வற நிற்பாயாக; எ - று.

அறியும் பகுதியில்லார் அஃறிணையோ டொப்பாராதலின் 'அல் லாதது' என்றார். விண்பற்றாய் நிற்றலாவது ஆகாயம் பொருள்களிற் பிரிவறக் கலந்திருத்தல் போலப் பிரிவற நிற்றல்; கண்டுப் பிரியாமை மாத்திரைக்கே உவமை கொள்க. "கண்பெற்றார் கதிரொளி கண்டது போல' வென மாற்றுக. (சச)

பரையில்வியாத்தி.

விண்ணிற் கதிரோன் விளங்கி விரிந்ததுபோற்
கண்ணிற் கதிரோன் கலந்ததுபோ - னண்ணிப்
பரைநின் றவி னீயும் பதிவையே யாகி
யுரையிறந்திட் டொன்றாவை யுற்று.

(இ - ள்.) ஞாயிறு விண்ணில் விரிந்ததுபோலவும் கண்ணிற் கல ந்தது போலவும் பராசத்தியில் நீயும் பொருந்திப் பதிவையேல் நீ யத னோ டொன்றாகுவை; எ - று.

விண்ணிற் கதிரோன் பொருளால் தான்வேறு விண்வேறாயினுங் கலப்புமுறையா லொன்றேயாதல்போலவும், கண்ணுங் கதிரும் வே றாயினும் ஒன்றுமாறுபோலவும் சத்தியோடும் பேதாபேதமா யுயிரு நிற்குமா மென்பது.

பரையில் வியாத்தி யென்பது "எதிர்ப்படுபரையினிற் சேதன வியாபகப் பரப்பினைக் காண்பது" எனுஞ் சிவானந்த போதத்தானு ணர்க. (சரு)

பரையில் யோகமும் போகமும்.

விண்ணில் விகற்பமற மேவியகா னின்றதுபோ
னண்ணும் பரையதனி னண்ணியே - யெண்ணிறந்து
நீறுறங்குந் தன்மைபோ னிற்கைபரை யோகமதிற்
சீறுறலே போகமெனச் செப்பு.

(இ-ள்.) ஆகாயத்தில் இயங்காது ஒருபடித்தங்கிய காற்றுப் போலப் பராசத்தி வியாபகத்தில் நண்ணி நீர் ஒழுகி நிலைத்தல்போற் பரவி நின்றறிவது பரையில் யோகமெனப்படும்; அப்பராசத்தியின் அனுபவ நிலையை யெய்தி யின்புறுதலே பரையிற் போகமெனப் படும்; எ - று.

ஒரு வியாபகப்பொருளிற் பிறிதொரு பொருள் வியாபித்து நிற்குமாற்றிற்கு விண்ணிற்கால் நிற்குமுவமையும், அங்ஙனம் வியாபகமுறப்பரவி யசைவின்றி நிற்கு முறைமைக்கு நீருறங்கு முவமையுங் கூறப்பட்ட தென்னவறிக. உறங்குதல் ஈண்டு எல்லா வொழுகிப் பரந்து அசைவின்றி நிற்றல். சீர்-செல்வம்; ஈண்டு இன்பத்தின்மேற் றாயது ஆகுபெயர். (சசு)

முத்திசாக்கிரம்.

நீங்காத பேரறிவு நீங்காமற் கண்டபி
நீங்காம னின்றபடி நின்றதனி - னீங்காம
னின்றுவிட லன்றோ தானின்மலன்றன் பேரறிவி
லொன்றுபட லென்றறிநீ யுற்று.

(இ-ள்) இவ்வியல்பால் நிற்றல் தான் இறைபணர் திருவடி ஞானத்தி லிரண்டறக் கலக்குமுறை; எ - று.

நீங்காத பேரறிவு - பிரிவற்ற பெரிய ஞானம். (சஎ)

எத்திசையு மொன்று யிறையறிவி லேயழுந்தல்
சுத்தப்பரை யோக மெனத்துணிநீ - பத்தியமே
யத்தகைமை கண்டா லதுமுத்திச் சாக்கிரமாஞ்
சித்த மயலறவே தேர்.

(இ - ள்.) இறையருர் ஞானமாகிய சுத்த பராசத்தியிலுறல் சுத்த பரையோகமாம்; அங்ஙனமுற்று அதைக் கண்டிருந்தல் சாக்கிரமாம்; எ - று.

பூதப் பழிப்பிலிருந் ததுகாறு முணர்த்தியன வெல்லாம் 'முத்திசாக்கிரம்' எனவறிக. 'எத்திசையு மொன்றாய்' என்றது வியாபக நிறைச்சியை யுணர்த்தற்கு. (சஅ)

முத்திசாக்கிரமுற்றும்.

## முத்திசொற்பனம்.

### சாக்கிராதீதம்.

நின்ற வறிவறிகை நீங்காமை சாக்கிரமா
மன்றி யவிழ்த லதீதமாஞ் - சென்றறிவை
நீங்காம னின்று நெடிதுதுயில் கொள்ளவே
வாங்கா தறிவாய் வர.

(இ - ள்.) அங்ஙனங் கண்டிருந்து அறிவு விரிதலே சாக்கிராதீத மென் றறியற்பாற்று; அதில் நீங்காமற் றூங்குவார்க்குப் பரையி லதீதமெய்து முணர்வும் எளிதி னெய்தும்; எ - று.

'நின்றவறிவறிகை நீங்காமை சாக்கிரமாம்' என முற்செய்ய ளிற் கூறியதையே யினைபுணர்ந்த கோடற்பொருட்டு ஈண்டு வழி மொழிந்து கொண்டார், வழிமொழிதலெனினும் அனுவதித்தல எனி னும் ஒக்கும். அவிழ்தல் - விரிதல். வாங்காது - பின் வாங்காது. (

முத்திசொற்பனமுற்றும்.

---

## முத்திசுழுத்தி.

### பரையிலதீதம்.

இவ்வறிவு காண்ட விருஉருஞ் சாக்கிரமா
மவ்வறிவு காணு ததீதமா - மிவ்விரண்டும்
பாராம னிற்றல் பரையி லதீதமா
மாரா வறிவகன்ற தால்.

(இ - ள்.) முற்கூறிய சாக்கிரம் அதீதம் என்னு மிரண்டையுங் கடந்து அவற்றை யறியாது நிற்றல் பரையிலதீதம்; ஈண்டே ஆணவ விருளகன்று முழு அறிவும் விரிந்ததாம்; எ - று.

முதலிரண்டடி அனுவாதம். ஆரா.- நிறைந்து; செய்யா என் னும் வாய்பாட்டு வினையெச்சம். (௫0)

ஈசனறி வாகியெலா மின்று கழன்றகன்றாய்
பாசமிக வைத்ததனிற் பற்றதே - கூசாம
னோராக நீங்கியதி னின்ற சுவடறவே
வாராய் சிவமேல் வர.

(இ - ள்.) பதிஞானத்தை யெய்துதலா லுணர்ந்து மலத்தினின்று நீங்கிய நீ பயிற்சிவயத்தான் ஓரோவழி யதைப் பற்றவுங் கூடுமாதலான் அங்ஙன மாகாமைப்பொருட்டுச் சிவத்தைக் களைகணுக் கோடற்பாற்று; எ - று. (௩க)

முத்திசுழுத்தி முற்றும்.

---

## முத்திதுரியம்.

### சுத்தாவத்தை.

அறிவடையச் சென்றங் கதீதமாய் நின்று
குறியிறந்திட் டொன்றுங் குறியா — நெறியேது
சுத்தவத்தை மைந்தா வுன் றொல்லைமல மில்லையில்லை
யத்துடனே செல்வதது வாம்.

(இ - ள்.) அடையச் சென்று இறந்திட்டுக் குறியா நெறியேது, அது சுத்தஅவத்தை என்றறிவாயாக; ஈண்டு மல மில்லையென்பது திண்ணம்; சுத்தஅவத்தை யெய்தியவுடனே யதுகழியும் பெற்றியது; எ - று.

குறியிறத்தல் - சுட்டறுதல். (௩உ)

### சுகதுரியம்.

ஆவது, "அறிவக லதீதத் தனுபவஞ் சிறிதாங் குறுவது" என்றறிக.

பைய விருந்து பதைப்பற்ற பின்னுனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே - யையனே
கண்டாய் சிவபூமி காட்சியற்க் கலந்து
கொண்டாள்வான் கண்டாய் குறித்து.

(இ - ள்.) அங்ஙன மிருப்பாய்க்குத் தூய வின்பச்சுடர் தோன்றும்; தோன்றுங்கால் அவ்வின்பத்தைப் பயக்குஞ் சிவத்தைக் கண்டு பிரிவறக் குறிக்கொண்டு அதனொடு கலந்திருப்பாயாக; எ - று.

துணிவினால் 'கண்டாய்' என இறந்தகாலத்தில் வந்தது. பைய - மெல்ல, "பையப்பையப் பசந்தன்று நுதலே" என்பதனானுமறிக.

விழுந்த வவதரத்தில் விஞ்சு சுகந்தா
னெழுந்ததுவே தெங்ஙகே யிறைவா - மொழிந்தருளாய்
மாமணியிற் சோதி மலர்ந்த பிரபைபோ
லாமரன்றன் பாலே யது.

இச்செய்யுள் கடாவிடை.

(இ - ள்.) முற்கிளந்த வின்பம் யாண்டெழூஉவ தன்மையா யின்;—இறைவன்மாட்டு மணியினொளிபோல வெளிப்படுவதென் றறிவாயாக; எ - று.

எனவே இறைவனும் அவன்மாட்டெழூஉம் இன்பமும் குணகு ணித்தன்மைய வென்பது பெறுதும். (ருச)

துன்பற்ற வின்பச் சுகப்பிரபை தன்னையே
யின்பசத்தி யென்றறிநீ யெப்போது - மன்புறவே
நின்றதிலே யாறி நிலாவு நிலாவும்போன்
மன்ற றாழுணர்ந்து வாழ்.

(இ - ள்.) அத்தகைய ஆனந்தவொளியை யிறைவனுக்கோர் சத்தியென்றுணர்ந்து அதில் நிலவு நிலவுங் கலந்திருத்தல்போற் கூடி வாழ்வாயாக; எ - று.

நிலாவுவமை, ஒன்றுபட்டிருந்தன் மாத்திரைக்கே கூறியதென் றுணர்க. மன்றல் - மணம். ஆறுதல் - மலத்தினால் நிகழ்ந்த துன்ப நீங்கியிருத்தல். (ருரு)

தேனூறு மின்பச் சுவையை மிகப்படியே
வானூடர் காணாத மன்னவனே - ஞானு
விதுவு மொருசத்தி பிறவார்க்கி தானு
லெதுமுத்தி சொல்லா யினி.

இச்செய்யுள் மாணாக்கன் கூற்று.

(இ - ள்.) இன்பத்தினைப்பெற்றி யிதுவாயின், ஞானச் செல்வத் தையுடைய என்னாசிரியனே! இதுவும் இறைவனுக்கொரு ஞானசத் தியாய் முடிதலின், இதனினூங்குப் பெறுவதாகிய முத்தி யிதுவென் றறிவுறுத்தருளுக; எ - று.

மல் - செல்வம்; மன்னவன்-செல்வத்தையுடையவன். 'ஞானு' என்பதைச் "சத்தி" யோடு கூட்டுக. (ருசு)

முத்திதுரிய முற்றும்.

---

## முத்திதுரியாதீதம்.

### சுகாதீதம்.

என்பது, "ஆன்றவச்சுகத்துக் காதாரமாங்குணி, தோன்ற நிற்ப துவே."

இந்தச் சுகத்தி னினிமை விழியாம
லந்த வறிவி னயர்ந்ததுபோற் - றொந்தமறப்.

போதா யிதுவே சுகாதீதம் பேரியற்றோர்க்
காதார மான வருள்.

(இ - ள்.) மேலெல்லாம் வந்த ஞானங்களை மறந்தாங்குச் சுக ரூபமாகிய விதனினும் நீவிழித்துப்பாராது அசண்டற் றொடர்பறப் போதுவாயாக; அங்ஙனம் போது நெறியே மெய்ப்பொருள் கண்டார்க்குக் கலைகளுணாது; எ - று.

அயர்தல் - நழுகவிடுதல். (௫௭)

ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரா
னன்றி யொருபொருளு மாகாதே - நின்றழுந்திச்
சொல்லரிய விந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்லவன்றா ளேமே நிலை.

(இ - ள்.) ஆனந்தமே தனக்குவடிவமாகப் பொருந்தி யதற்குள் ளுறையுந் தம்பிரானையன்றி யொருபொருளு நிலையுதன்மாலைத்தன்று. ஆகலான், உரைத்தற்கரிய விச்சுகத்திற்கு மதீதமான அவன் மாட்டு நிற்பாயாக, எ - று.

வடிவு - உடம்பொடு கூடியது; உரு - உறுப்பறியப்படாதது.
ஒன்றும் - ஒன்றியெனத்திரிக்க. (௫௮)

சிவப்பேறு.

எல்லாங் கடந்த விடமே சிவமென்று
சொல்லாவோர் கூறுந் தூயோர்க - ளல்லாய்கே
ணின்றபடி தானே நிலையா நிலையதனி
னின்றுவிடு வோராக நீ.

(இ - ள்.) இவ்வாறு முறைத்துப் போந்த விவையெல்லாங் கழிந்த நிலையமே சிவமென்று அச்சிவஞானங் கைவந்த பெரியோருரைப் பராதலான், அந்நிலையில் ஒருதலையாக நின்றிடுவாயாக. எ - று.

நிலையா - நிலைத்து; இச்செய்யாவென்னும் வாய்ப்பாட்டு வினை யெச்சம் 'நின்றுவிடு' என்பதில் நிற்றல் என்பதனோடு முடிந்தது. ( )

வானகத்தில் வானு மணத்தின் மணமும்போ
லானசுகப் பேற்றி லழுந்தியவா - தாளுரு
மாண்ட குருநாதா வடியேன் பெருவாழ்வை
மீண்டு சொல வுண்டோ விதி.

(இ - ள்.) அத்தகைய வின்பத்தில் அழுந்திய வாற்றிற்கு வானில் வானும் மணத்தில் மணமும் பொருந்திய தொக்கும்; அது

(இ - ள்.) முற்போந்த அத்துவிதச் சிலப்பிற்குத் தாள் தலை எனு
மிரண்டு சொற்களுந் தம்மிற் கூடித் தாடலையென நிற்பதே உவமை
யாம்; இங்ஙனநிற்கு மம்முத்திநிலையில் வீடுபேற்றைப் பயப்பனவாய
சன்மார்க்க முதலிய ஞானநிலைகளுமாண்டு நிகழ்வனவல்ல; எ - று.

'தாள்' எனுஞ் சொல் தாழ்ந்த நிலைக்கண்ணதான உயிரையும்
'தலை' எனுஞ் சொல் உயர்ந்த நிலைக்கண் விளங்கு மிறைவனையுங்
குறிப்பனவாம். 'தாள்' எனுஞ் சொல்லிறுதிக்கண்ண ளவ்வும் 'தலை'
எனுஞ் சொன்முதலியான தவ்வுந் தனித்துநிற்கு மிரெழுத்துகள்.
இவை புணருங்கால் டவ்வென்று மோரெழுத்தாக நிற்கும்; நிற்கினும்,
ஆண்டவ்விரண்டெழுத்தி னொலியும் புலப்பட்டுத்தோன்றும்; தோன்
றுழி ளவ்வி னொலி இறப்பவுநுண்ணிதாகவும் தவ்வி னொலி நன்குபுல
ப்பட்டு மொலிக்குமாறு நுனித்தறிந்து கொள்க. இதுபோலவே, வீடு
பேற்றின்கண் முதல்வன் நிகழ்ச்சிகளே தோன்றுவனவாயும் உயிரின்
நிகழ்ச்சிகள் தோன்றாதனவாயு மிருக்குமென்க. ஆங்ஙனம் புணர்ந்த
நிலைக்கண்ணதான டகரம் ஓரெழுத்துமாகாது ஈரெழுத்துமாகாது
ஒன்றிரண்டெழுத்துகளுமாகாது நிற்குமாபோல இறைவனு முயி
ருங் கலந்துநிற்குமுறைமையை யறிந்துகொள்க. இச்சுருங்கிய வுரையி
லிவ்வியல்பெல்லாம் விரிக்கப்புகின் வரம்பின்றிப் பெருகுமாதலான்
முடிந்தநூல்களி னுரைகளிற் கண்டுதெளிக. 'நித்தனே' 'சுத்தனே'
முதலியவாயுஞ் சொற்களாலும் உயிரிலக்கணம் தெளியக்கிடந்த
வாறுணர்க. இருபடியிரண்டுந் தூங்கிசைச் செப்பலோசைய. (௧௨)

> அந்தச் சுகத்துக் கதீத வதத்தையென்பர்
> பந்தமற்ற முத்திப் பயனறியா - ரந்தோ
> பிரியாத வின்பப் பெருமானைப் பெற்று
> மறியாத வாதனையா லாங்கு.

(இ - ள்.) ஆங்ஙனம் பெற்ற பேரின்பநிலையையும், முத்திப்பய
னிஃதென்றளந்தறிபு மாற்றலில்லாத மடவோரிலொருசாரார் அஃது
அதீதத்தையுங் கடந்துநின்ற அஞ்ஞான மென்றுரைப்பர்; தம்மோ
டொன்றியைந்த எம்பெருமானைப் பெற்றும் அவனையெய்து பெரும்பேறு
பெறாது அறியாமை வயப்பட்டுக் கெடுகின்றன ரந்தோ; எ - று.

இதனால், முத்தியென்பது பிறிதன்று அளவு மஞ்ஞானமேயென்
றுரைக்கு மதவாதிகளை மறுத்தருளினர். 'இன்பப்பெருமானை' என
வுடம்பொடு புணர்த்தார் அப்பெருமானை யெய்துவது பேரின்பமே
யாக வதனை யஞ்ஞானமென்றுரைத்தல் கொடிது மடமையென்றற்கு
அறியாதவாதனை - ஆணவப்பழக்கம். (௧௩)

### பரமானந்ததரிசனம்

நின்ற நிலைசிவமாய் நின்றாயே நின்மலனு
மென்றுமவன் றானா யிருந்தானே - யன்றே
யிவனுக் கிதமே தவனாகி நின்ற
விவனுக் கிதமோ தினி.

(இ - ள்.) நின்ற வந்நிலையில் உயிர் சிவமாய் நின்றது; சிவமு முயிராய்நின்றது. அங்ஙனநின்ற சிவனுக் கொருவித இன்பமுமில்லை; உயிருக்கே இன்பமென்றறிவாயாக; எ - று.

முத்திக்கண் உயிரின் றொழிலெல்லாந் தன்னுடையவாகக் கோடலின் 'என்று மவன் றானாயிருந்தானே' என்றார். 'நின்றாய்என' முன்னிலையாற் கூறிப் பின் 'அவன்' எனப்படர்க்கையாற் கூறுதல் ஓர்வழுவமைதி; "முரசுசெழுதானை மூவருள்ளு, மரசெனப்படுவது நினதேயத்தை' என்புழிப்போல; இதைப் புறனடையானமைக்க. 'இவனுக்கிதமே தினி' என்னும் பாடம் பின்வருஞ் செய்யுட்களொடு முரணுறுதலின் 'இவனுக்கிதமோதினி' என்றஃதிருத்தல் வேண்டுமென்று துணிக. (கூச)

அன்றே தொடங்கி யனைத்துயிருந் தானாகி
யொன்றாகி நின்றவனுக் கின்பூட்டிக் - குன்றாமற்
கொண்டுவிட லன்றோநங் கோமாற் கிதமென்று
பண்டைமறை சொல்லும் பரிந்து.

(இ - ள்.) அற்றேல் இறைவனுக் கிதமாவதுதா னியாதோவெனின்;—அநாதியே எல்லாவுயிர்க்கு முயிராய்நின் றவற்றை யியக்கினுந் தன்னையொன்றி யொன்றறக் கலந்தவுயிர்க் கின்பமாகிய நடத்துமடையை யுடைத்துவிட் டருத்துதலே யவற்கிதமாவதென்று பழைய மறைகளெல்லா முரைக்கும்; எ - று.

'அவனுக்குப் பரிந்து இன்பூட்டி' என இயைக்க. (கூரு)

பார்க்கரிய விந்தப் பரமசுகந் தன்னைச் [ரிய
சேர்ப்பனுயிர்க் கென்றிறைவா செப்பினையே - மாற்ற
வானந்த மாருயிர்கட் கண்ண லருத்துவது
தானெங்குப் பெற்றவா சாற்று.

இச்செய்யுள் மாணக்கன் வினா.

(இ - ள்.) சுட்டற்ற விவ்வரிய சுகத்தை யிறைவன் யாண்டுப் பெற்று உயிரை நுகர்விப்பன்? எம்மையனே! அதை அடியேனுக்கு விளம்புக; எ - று.

ஆருயிர் - அரியவுயிர் ; அருமையில் மையும் உகரமுங் கெட்டு முதனீண்டது. (சுசு)

பெற்றருந்தி யின்பம் பிறக்கு மருந்தினனே
வுற்றபர மானந்த முள்ளதோ - மற்றிதுதா
னென்றுநீ கேட்கி லிறையுருவ மானந்த,
மன்றிவே றொன்றில்லை யாம்.

(இ - ள்.) அங்ஙனம் பெற்று அருந்துகின்றானே இயல்பிலேயே யவனுக்கஃதுள்ளதோ வென்று வினவுவார்க்கு இறைவனதுருவமே இன்பத்ததுவன்றி வேறல்லவென விடுக்க, எ - று. (சுஎ)

ஆனபர மானந்த மாகின்ற வெல்லையே
யூனமிலா வுண்மைதனி லொன்றுபட - லீனமறத்
தானென போது தணவா தெழுந்தசுக
மானே யதுவா மதி.

(இ - ள்.) அதுவே யிறைவனே டொன்றுபடுதலா லுண்டா மின்பம், எ - று.

தணவாது—நீங்காது. (சுஅ)

பரமானந்தயோகம்.

விளைந்தபர மானந்த வெள்ளந் தனிலே
திளைந்துதிளைந் தாடியதிற் றோன்று - வளைந்துன்னை
நீர்போ லமிழ்த்தியதி னீணிழல்போற் றன்கரந்து
பார்போற் றரிப்பாகும் பார்.

(இ - ள்.) பேரின்ப வெள்ளத்தில் நீயுன்னை நீர்ச்சுழிபோற் சரிந்து சுரிந்தழுத்தி யந்நீர்நிழல் கரந்து தோன்றுமைபோல் நின்னறிவுந் தோன்றாவாறு நிலம்போல் நிலையுதலுற்று; எ - று.

இச்செய்யுள் குளகமாய்ப் பின்னைச் செய்யுளொடு முடியும்; என்னை? "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்றார் தமிழ்த் தண்டியாசிரியராதலின். தரித்தல் - தங்கல். பார் - அசைநிலை. (சுகூ)

பாராதே யந்தப் பரமசுகந் தன்னை
நேராகத் தானு நிலைபோலத் - தீராச்
சுபாவ மதுவாகித் தோன்றி மறையாதே
யபாவமாய் நில்லா யதில்.

(இ - ள்.) பாராது அத்துவாகத்தோன்றி மறையாது அதில் அபா வமாய் நில்லாய், எ - று.

அபாவம் - உள்ளதல்லது; சூனியமெனப்பொருள் கூறுவார்க்கு நான்கபாவங் கோடலும் பொருளழியின்மை கோடலும் பொருந்தா மையறிக. 'அதுவாதல்' முன்னர்க் கூறியவற்றிற் கண்டுகொள்க. (எ0

பரமானந்தபோகம்.

நிஷ்பர மானந்த நேரே யநுபவித்தங்
கொண்றுபட வுள்ளுருகி யோவாம - லென்று
மதுவுண்ட வண்டுபோன் மாளாச் சுகத்தைப்
புதிதுண் டிருந்துவிடப் போது.

(இ - ள்.) அப்பேரின்ப வெள்ளத்தில் தேனையுண்ட வண்டைப் போல் உள்ளுருகி யோவாமற் புதிதுண்டிருக்க; எ - று.

மதுவுண்டவண்டு, மதுமயக்கத்தால் தன்னையுந் தானுண்ட தேனையுமறியாது தேன்பயந்த வின்பவயத்ததா யிருக்குமதுபோல என வுவமைகொள்க. புதிதாக ஒருபொருளை நுகர்வார் மிக்கவேட் கையோ டதைநுகர்தலின் ஈண்டும் அது தோன்றுதற்பொருட்டுப் 'புதிதுண்டு' என்றார். (எக)

பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
யுருகியடி யேனருந்த வூட்டுங் - குருவே
யழியாத வின்ப மானந்தா னென்னும்
வழியேது சொல்வீர் மகிழ்ந்து.

இச்செய்யுள் மாணாக்கன் வினா.

(இ - ள்.) இவ்வரிய பேரின்பத்தை யடியேனு நுகருமாறு நுகர் வித்த மெய்க்குருநாதனே! அரனார் தம்மின்பத்தைப் பிறர்க்கு நுகர் வித்தலன்றித் தாம் நுகராரென்பதென்னை; எ - று. (எஉ)

சர்க்கரைதா னார்க்குந் தருமிரத மவ்விரதஞ்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்காற் - சர்க்கரைக்கின்
றின்புருவ மன்றி யெழிலுருவம் வேறுண்டோ
வின்புருவ மேயிறைக்கு மென். (எங)

நாவா ரிரதமது நாவருந்த லல்லாதிங்
காவா விரத மறியுமோ - வோவாப்

பரமசுக முன்பாற் பலிப்பதே யன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன். (எச)

இவை யிரண்டுசெய்யுளு மொருதொடர்.

(இ - ள்.) கன்னல் தன்னைநுகர்வார் யார்க்கு மின்சுவை பயத்த லல்லது தானச்சுவையறியாதவாறு போலவும், நாவானது தன்பாற் பொருந்திய பண்டத்தின்சுவையை யறிதலன்றி யப்பண்ட மச்சுவையை யறியாதவாறுபோலவும் பேரானந்தம் உன்னை யுவப்பித்தலன்றித் தனக்கு நிலைக்களமான இறைவனை யுவப்பியாதாம்; என்னெனின்;— கன்னலுக்கு இன்சுவையே யுருவாவதன்றி வேறுருவில்லாமைபோல இறைவனுக்கு இன்பமுமாமாகலின், எ - று.

'யார்க்கும்' என்பது 'ஆர்க்கும்' என மரீஇயது. எழில்-வனப்பு. ஆஆ! வியப்பின்கட்குறிப்பு.

இந்தச் சுகமான்ம லாப மெனவறிநீ
யந்தச் சுகமொழிந்திங் காராதே - யிந்தச்
சுகமெலா மந்தச் சுகமாகி யுன்ற
னகமெலா மானந்த மாம்.

(இ - ள்.) இங்ஙனம் பெறுமின்பமே நின்னுயிர்க் குறுதியான வூதியமாம்; ஆகலான், அதையொழிய வேறு பிறவின்பம்போற் றோன்றுவனவற்றை நுகராமல் இவ்வுலகத்து நீ இன்பமென நினைக்கு மெல்லாவற்றையு மொருவி அந்நிலையெல்லாம் மறுமைக்கண்ணதாம் எண்டுக்கூறிய இவ்வின்பத்தில் வைப்பையேல் நின் உள்ளீடெல்லாங் களிப்பதற்குக் காரணமான பேரின்பமா மது; எ - று.

ஆர்தல்—நுகர்தல். (எரு)

## பரமானந்தமேலீடு.

மேலீடு—மேலிடுதல்.

அண்ணலுமா னந்த மருளுமா னந்தமுயி
ரெண்ணிலா வானந்த மெவ்வுலகும் - பண்ணி
யளித்தழிப்பா ராகு மவர்களுமா னந்தங்
களித்ததுவே யெப்போதுங் காண்.

(இ - ள்.) அண்ணலும் அருளும் உயிரும் எவ்வுலகும் முத்தொழிலியற்றும் பிரமவிட்டுணு உருத்திரராதிகளுமாகிய வெல்லா மானந்தரூபமாக எப்போதுங் களிப்பதே யதுவாம்; எ - று.

இதனாற் "காணுஞ் சரணங்களெல்லாம் பேரின்பமெனப்பேணு" நிலை கூறப்பட்டது. அளித்தல் - காத்தல். (எசு)

ஏங்குநிறைந் தானந்த மெல்லா மமிழ்த்திமிகப்
பொங்கிக் கரைபுரண்டு பூரணமா - யங்கு
வளர்ந்த வுலகுயிரும் வாய்த்த சுகமா
மளத்திற் புகுந்ததுபோ லாங்கு.

(இ - ள்.) அவ்வின்பம் ஆண்டுநிறைந்து எல்லாப்பொருள்களானு மெய்துமின்பத்தையெல்லாந் தன்கீழ்ப்படுத்தி யதனானும மையாது பொங்கிப்புரண்டு பூரணமாய அம்முத்தியில் சுகமாகியவிடத்தில் உலகுயிரனைத்துங் குடிபுக்கனபோல் முற்றியன; எ - று.

'பூரணமாய' என்பதனிறுதி அகரந்தொக்கது. உலகுயிரும் புகுந்ததுபோலாங்கு வளர்ந்த என வினைமுடிக்க. (எஎ)

கண்டவிட மெல்லாங் கருணைக் கடலமுத
மொண்டுகொள லாய்நிறைந்த முத்திதனைப் - பண்டே
திருமாலயனறியாத் தேசிகனார் பாதந்
தருமா மடியேற்குத் தான்.

(இ - ள்) கண்டவிடமெல்லாங் கண்டவிடமெல்லா முகந்துகொள்ளுமாறு கருணையமிழ்து கடலாய்நிறைந்த முத்தியை மாலும் அயனுமறியா விறைவனார்பூம்பதங்கள் புகுத்தநாயினுங் கடையேனாகிய அடியேற்கு முதவுமாம்; எ - று.

முகந்து என்பது 'மொண்டு' என மரீஇயது. (எஅ)

பரமானந்தஅவசம்.

பரம பரானந்தம் பார்கீழ்மேன் மற்று
மரவம்வா ராதே யகலும் - பூரணமா
யாங்கே யமிழ்ந்தி யவசமா மானந்த
நீங்கா ததுவாகி நில்.

இ - ள்.) அப்பெற்றித்தாகிய பேரின்பத்தை யோவாது நோக்குவார்க்கு அது கீழ்மேலிடமெல்லா மெல்ல அகன்றுநிறையும்; நிறைந்துழி யாங்கமிழ்ந்திப் பரவசமாய்ப் பிரியாது நிற்கற்பாற்று; எ - று.

பூரணமாய் என்பது எதுகைமாத்திரை நோக்கிக் குறுகியது. (

உற்றபர மானந்தத் தொன்றா யதிலுறங்கி [மிலா
முற்றுவதே முத்திமுடி வென்றுரைக்கும் - குற்ற
வைதிக சைவம் வழிநூல் புராணமற்றுஞ்
செய்வன்றா லெல்லாந் தெளி.

(இ - ள்) இங்ஙனம் பேரின்பவெள்ளத்தி லிரண்டறக்கலந்து நிலைத்துறங்குவதே முடிவான முத்திநிலையென்று வழுவில்லாத வைதிக சைவநெறி விளக்குஞ் சிவஞானபோத முதலிய நூல்களும் அவற்றின் வழிப்படுநூல்களும் புராணங்களும் ஏனைநூல்களுந் துணிந்துரைக்கும். இதைத் தெளிவாயாக; எ - று.

'குற்றமிலா வைதிகசைவ' மென்று விதந்துரைத்தவதனாலேனைய நெறிகளெல்லாம் புரைபுடையனவாய் அறிவுதிரித்து மக்களை மறித்து மறித்தும் பிறப்பிற்கடாவும் பெற்றியவென்பதும், இஃதன்னதன்றென்பது மினிது விளங்கும். (அ0)

அணுவகை.

என்பது ஆன்மாக்களின் கூறுபாடு.

ஒன்றிரண்டு மூன்றுமல முள்ளவுயி ரவருக்குஞ்
சென்றிவன்போ னேரே சிவமாகி - நின்றநிலை
யிவ்வகையே யாரு மெழிற்குருவா மீசனை
யவ்வகையை நீயிங் கறி.

(இ - ள்.) ஆணவமலமொன்றேயுடைய விஞ்ஞானகலர், ஆணவங் கன்மமிய மிரண்டுமுடைய பிரளயாகலர், ஆணவங் கன்மிய மாயை யிம்மூன்று முடைய சகலர் என்னு மிம்மூத்திறத் தான்மாக்கட்கு முறையே யுண்ணின்றும், முக்கண்ணுஞ் செக்கர்ச்சடையுங் கறைக்கண்டமு மான்மழுவு முமையம்மையும் பொருந்திய திருவடையாளங்களுடன் எதிர்நின்றும், மக்கள் யாக்கைபோல் வெளிப்பட்டுவந்து மிவ்வாறிறைவன் ஞானத்தையுணர்த்தி வீடுபேற்றையருளுவ னிதையறிவாயாக; எ - று.

'ஈசன் ஒரு மலமுள்ள வுயிர்க்கு உள்ளத்திற் சென்று, இரண்டு மலமுள்ள வுயிர்க்கு இவன்போ னேரே சிவமாகி, மூன்று மலமுள்ள வுயிர்க்கு எழிற்குருவா நின்ற நிலை யிவ்வகையேயாரும், எனப்பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்க; இங்ஙனம் பொருள் கொள்ளாக்கால் 'மெய்ஞ்ஞானந்தானே விளையும்' என்னு முதனூலொடு பொருள் பகைக்கும். (அக)

முன்னரெடுத்தோதியவுரையிறந்த வின்பத்தைப் பெறுதற்குப் பிறிதுமோர் உபாய முணர்த்துதனுதலிற்று.

## பஞ்சாக்கரதரிசனம்.

அருசெழுத்து மண்ணலரு ளான்மா திரோதமலம்
விஞ்சி நமத்தூரந்து மெய்யருள்வந் - தஞ்சச்
சிகாரத்தில் யவ்வை விடுந்தி நிலாவின்பப்
புகாரிற் புகுந்தருந்து போய்.

(இ - ள்.) சிவயநமவென்னு மைந்தெழுத்து முறையே இறைவனும் அருளும் ஆன்மாவுந் திரோதாயியும் ஆணவமலமுமாம்; வீடுபேற்றை விரும்புவார் நமசிவய எனத் திரோதமு மலமும் பிற்பட வுச்சரியாது சிவயநம வெனவுச்சரிக்க; அங்ஙனஞ் செய்வாரை அருளாகிய வகரம் உயிர்க்குக் களைகணான சிகரத்தில் சேர்க்கும், சேர்ந்து இன்பக் கடலிற் புகுந்து திளைப்பாயாக; எ - று.

திரோதாயியும் மலமு முற்பட வுச்சரிப்பாரை அவை பிறப்பிறப்பிற் செலீஇச் சுழற்றுதலா னிம்முறை தெரித்தோதினார். தூரத்தல்-தனக்குமுன் செலுத்தல். முன்பின் என்னு முருபுகளிக்காலத்து மாறிவழங்கப்படுகின்றன. ஈண்டாசிரியர் 'தூரந்து' எனக் கூறினமையான், அச்சொற்களின் முற்கால வழக்கையே அவர் தழீஇயினரெனப்படுணர்ந்து அவ்வாறே பொருள் கூறினும்; அதுபற்றி மயங்கற்க. "தஞ்சக்கிளவி யெண்மைப் பொருட்டே" என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறினராக அப்பொருளிறந்து ஈண்டுக் 'களைகண்' எனப் பொருள் கூறியது வழுவாமெனற்க. கூறிய பொருளன்றிப் பிறபொருட்குதலையும் புறனடையா னவர் தழீயினராகலின்; இது ஆசிரியர் நச்சினார்க்கினியாருரையானுணர்க. புகார் - சழிமுகம்; ஈண்டுக் கடலின்மேற்றுனது ஆகுபெயர். (அஉ)

## குருஸ்துதி.

பற்றிநின்ற பாசம் பறிந்தநல வேவிழித்திட்
டுற்றவுயிர் காட்டி யுணர்வுணர்த்தி - மற்றுஞ்
சிவப்பேறு தந்து சிவபோக வாரி
புகப்பெ றளித்தவரைப் போற்று.

(இ - ள்) இங்ஙன மெய்தற்கரிய பேறளிப்பித்த குருநாதனை என்றுமென்றும் வழிபடுக; எ - று.

அகலவே விழித்தல் - நயனதீட்சை. (அ௩

சீடவிலக்கணம்.

இரவு பகனிழல்போ லிட்டபணி செய்து
குரவர்புகழ் வாயாரக் கூறித் - திருமுன்
விழுந்துவிழி நீர்பொழிய மெய்விதிர்த்து நின்று
தொழுந்தவத்தோர் காணுஞ் சுகர்.

(இ - ள்) இன்ன தவத்தையுடைய சீடரே முத்தியின்பம் பெறுதற்குரியார் எ - று.

ஓருருவப்பொருளின் னிழல் அப் பொருளை என்றும் விட்டு நீங்காதவாறுபோல, ஆசிரியனையும் விட்டு நீங்காமையைத் தெரிவுறுப்பான 'நிழல்' உவமை கூறினார் விசிட்டு - நடுக்கம். (௩௪)

முத்தி நிருமித்தியின்பங்கூறல்.

ஆசு புக னிங்கி யருளிற் கலந்து சிவ
போக விளைவு புணர்ந்தாலும் - வேகத்
தெரிவாய் நிரயத் திருப்பர் குருசொற்
பிரிவா ருகத்திப் பிறந்து.

(இ-ள். குருசொற் பிழைப்பார் எத்துணைப்பெரியராயினும் எரிவாய் நிரயத் துட்பட்டு வருந்துதலேயன்றிப் பிறப்பிறப்பிலுங் கிடந்துழல்வார், எ - று.

ஆசம் - உடல். வேகம் - சினம். எரிவாய் - கொடிய நரகங்களின் ஒன்று 'புணர்ந்தாலும்' என்றமையாற் பெரும்பாலும் அங்ஙனம் புணராமையே யுணர்த்தியவாறு. (௩௫)

குருவழிபாட்டேபொருளெனக்கூறல்.

ஆகமுயிர் பொருள்கொண் டின்றே யருளளித்துச்
சோகமெனப் பாவிக்கச் சொன்னவரைத் - தாகத்தோர்
வேண்டு பொருடெல்லாம வேண்டுபொருள் வந்ததுபோற்
பூண்டுதொழு நேர்ந்த பொருள்.

(இ - ள்.) உடல் பொருளாவி மூன்றையு மாட்கொள்ளுஞான்று சீடன்பாற் கொண்டு அதற்குமாறாகக் கருணையை யுதவிச் சோகம்பாவனை செய்யச்சொன்ன ஞானாசிரியனைக் கெடுத்தத தேடுங்கலத்தை யெடுத்துக்கொள்வார்க்குவரு முவகையோடு தொழுதற்பாற்று, எ - று

ஆட்கொள்ளுஞான் றம்மூன்றையு முடன்கோடலை "அன்றே யென்ற னாவியுமுடலு முடைமை யெல்லாமுங், குன்றேயனையா யெ

(இ - ள்.) மருவுதலரிய வின்பத்தை யெய்துவித்த குருவினடியார தடியார தடியார தடியார தடியாரைச் சார்ந்தார்க்கும் பிறவிப் பெருங்கடலைக் கடத்தல் கூடும்; எ - று. (௮௯)

## யோகம்.

சன்மார்க்க மீதாஞ் சகமார்க்கஞ் சாற்றுங்காற்
பன்மார்க்கம் வாயுப் பகர்கருவி - தன்மார்க்கஞ்
சரய வொடுக்கித் தடுத்து வளியிரண்டு
மூலறவே நிற்கை மகிழ்ந்து. (௯௰)

அந்த மனத்தாலே யாதார மாறினையுஞ்
சந்தித் ததிற்பொருள்க டானறிந்திட் - டிந்துவி
லோவா வொளியைவந் தாருகமழு துண்ணிறைக்கி
லோவா வொளியா முரு. (௯௧)

நின்ற வொளியுருவி னீங்காம னிற்கவே
யொன்று மழியாம லின்புற்றுக் - கொன்றையந்தார்த்
தானுருவு நப்போலவெஞ் சாருப்பி யத்திலே
மானவக வாழ்வாய்க்காண் மற்று. (௯௨)

(இ - ள்.) முற்கூறியனவை சன்மார்க்க மெனப்படுவது; இனிச் சகமார்க்கமாவது இறைவனதுருவத் திருமேனியை அகத்தொழில் விசேடத்தாற் கண்டுவழிபடுதலேயாம்; எ - று.

சன்மார்க்கமெனினும் ஞானமெனினுமொக்கும். சகமார்க்கம்-யோகம். இவற்றின் பரப்பெல்லாம் சித்தியாரிற் கண்டுகொள்க. இதனாலெய்தும் பயன் சாரூப்பிய முத்தியாம்.

ஆறாதாரம்: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன.

## கிரியை.

புத்தி மார்க்கம் புகையொளி மஞ்சனம்பூ
வைத்தமுது தாம்பூல மற்றவையு - முத்தமமாய்த்
தேடிவைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
நாடவத்திற் செல்லாமனே, (௯௩)

சுத்தியைந்துஞ் செய்து தூகமுறு மந்திரத்தா
லத்தமனுப் பத்துமுக லமைந்தாக - வைத்துவைத்து
வித்தியா தேகம் விதிப்படியிற் றாபித்துப்
பத்தியன் மேனிதனைப் பார். (௯௪)

நூனி.

அந்த மலமறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த வறிவை யறிவித்தாங் - கிந்தறிவை
மாறுமன் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறுமற் கூறக் கொடி.

(இ - ள்.) தொன்மையே யுடன்மருவிய ஆணவமலத்தைப் போக்கி ஆன்மாவுக்குக் குடத்துள் விளக்குப்போன் மறைக்கப்பட்டிருந்த அறிவுச்சுடர்கொளுவி யவ்வறிவையு மதற்கறிவித்துப் பின்னிப்பசுவறிவையு மாற்றிச் சிவப்பேறென்னும் பேரின்ப வெள்ளத்தின்கட் டிளைப்பித்து நுகர்வித்தலே இந்நூற்பயனுமென்க.

கூற - கூறுவாயாக; வியங்கோள் விகுதி தொக்கது.

கொடி - மகடூஉமுன்னிலை; ஒன்றிறந்த சொல்லன்மையின் இஃதுவமை யாகுபெயர். (௧௦௦)

முற்றியது.

---

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் றிருவடி வாழ்க



சிவமயம்.

## இந்தநூலில்,

14-ம பாடல் "கண்ணப்பர்" எனுஞ் செய்யுளின்கீழ் ஒரு பிரதியில் பின்செய்யுள் இருக்கின்றது.

"விதிப்படியே பூசை விரும்பினவர்க் கென்று
மதிப்பிரிய முத்தி வழங்கா - நதிச்சடையோய்
நாடரிய முத்தியினை நாளாறில் பண்ணியதென்
வேட்டிற் கண்ணப்பர் விரைந்து."

103-ம் பாடல் "ஆசாரியமூர்த்த" எனுஞ் செய்யுளின்கீழ் ஷை பிரதியில் பின்செய்யுள் இருக்கின்றது.

"வானந் திரண்டுருவாய் வாராது மற்றதுபோல்
ஞானமய மோருருவாய் நண்ணாது - மானிடர்க்குப்
போகமுடன் முத்தி யளிக்குமெனிற் பூரணத்துக்
கேகதேசம் வந்த தென்."

எ - து. வானம்போல அசேதனமல்ல. இச்சாஞானக்கிரியைக ளுறுதியே சிவனுடம் பென்றது.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தஸ்வாமிநே நம:

# சித்தாந்தஞானபோதம்.

## சதுமணிக்கோவை.

காப்பு.

கண்ணை நுதலிற் கறையைக் களத்தின்மறைத் [தூர்
தெண்ணமிலா வென்போ லெழுந்தருளும் - வெண்ணெய்நல்
மெய்கண்ட தேவன் வினைவெண்பா விற்கு * முகங்
கைகண்ட தேசிகவுங் காப்பு.

நூலுண்மை.

(தார்கம்.)

† கடாதிகட்குத் தாரகங்க ளேழென்று காட்டி
விடாதகுய வன்றிரிகை மேன்மன் - கெடாததனைக்
‡ கொள்வோர் வினைகால நாசங் குவலயத்தைச்
செய்வோர்க்கு மிப்படியே செப்பு. (உ

(சர்வஜ்ஞானபடியால் வ்யாபதோடமில்லையென்கின்றது.)

விகாரியல வென்றுன்னை மேலோர் விளம்ப
றகாதுபுபற் சத்தம்போற் சம்பு - விகாரப்
படாதென்ப தெங்ஙனரு ளாகமங்க ளெல்லாங்
கடாவிடைக ணீமொழிந்தக் கால். (௩)

---

* முகங்கை கண்டதே - திருமுகத்திற் புழைக்கையொடுதோன்றுந்தெய்வம்: ஆவது மூத்தபிள்ளையார்.

† "வினையேசெய்வது செயப்படுபொருளே, நிலனேகாலங் கருவி யென்றா, வின்னதற்கிதுபயனாகவென்னு, மன்னமரபினிரண்டொடுந் தொகைஇ, யாவெட்டென்ப தொழின் முதனிலையே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும்.

‡ கொள்வோர், செய்வோர் - இடையினவெதுகை யென்றறிக.

(துதிக்குமுறை ஆன்மாக்கட்குத்தோன்றுதபடியாலென்கின்றது.)

வேதம் பதியருளிச் செய்தா னெனவிளம்ப
லோதுவார் தற்புகழ வொண்ணுதாம் - வேத
முனைத்துதிக்கு மாமாகி லுத்தமனே நீயு
முனைத்துதிப்ப தெவ்வாறுரை. (ச)

(தந்திரசர்ங்கரியங் கிரியாபாதத்துக்கொழிய ஞானபாதத்துக்கில்லையென்கின்றது. வேதவொழுங்கு மிப்படியே.)

ஆகமங்க ளெல்லா மொருவனரு ளிச்செயலன்
றேகையுட னெந்தாயுரைத்தருளிப - பாகமருந்
தந்திர சாங்கரிய மாகா தெனச்சாற்று
மிந்தவுரை யென்றே வியமபு. (ரு)

(பதிவாக்கியத்தாற் சொல்லுமளவையொழியப் பசுவாக்கியத்தளவைகளால் நியமிக்க வொண்ணுதென்கின்றது.)

மனவரக்குக் காய மருவாத வுண்மை
யுனதாகு மென்று மறையோது - மௌனலாவிம்
* மானத்தா லுன்னுண்மை மட்டிடலா மென்னுமது
ஞானத்தா யெங்ங னவில். (சா)

புராணம்.

(பூமிக்கு மத்தியார்ஜுனம் சுழுமுனையும் திருவம்பலம் நாபியும் வாணிதயமும் மகாமேரு முடியுமாகப் புராணங்கள் சொல்லுகையால் பூமிநின்றபொழுது அடுக்காகாமையால்விரோதமில்லையென்கின்றது.)

வாரிபுடை சூழும் வசுந்தரைக்கு மன்னியநாள்
மேருநடு வாக விளம்பியிட - ஓருஞ்
சுழுமுனை நாடியென்று சொல்லுவதேன் றில்லைப்
பழுதிறிரு வம்பலத்தைப் பார்க்கு. (எ)

(காமனைப் போர்செய்ய வரக்காட்டினவர்கள் வீரமறிதற்குச் சுட்டதென்கின்றது.)

காமனையு நீமயக்கங் கண்டிடுவை யாயிருக்கக்
காமன் மயக்கினுே கக்கருதிக் - காமனைமுன்
நீறு விழித்ததுவென் நின்மலனே நின்றனக்கு
மாறுமோ காமன் மதி. (அ)

---

* மானம் - அளவை.

(இலகிமா கரிமா சித்திகளாலும் திருவுள்ளமாறுகையாலும் பாரமாயிற்று என்கின்றது.)

அரக்கன் மலையெடுக்க வெய்தா யதன்மே
லிருக்குமிறை நீங்காதிருக்க - விரக்கமிலா
வீரமுற்ற வல்லரக்கன் வெவ்வியவாய் விட்டலறப்
பாரமுற்ற தெந்தாய் பகர். (௯)

(தர்மம்பண்ணுமிடத்துஞ் சிவனை முன்னிட்டுச் செய்யவேண்டுமென்கின்றது.)

மந்திரக் குற்றமல்ல மாவேள்விக் குற்றமல்ல
தந்திரக் குற்றமல்ல தானையெலாஞ் - சிந்த
மலையரையன் பாவை வரமிரப்பத் தக்கன்
றலையிழக்க குற்றமெந்தாய் சாற்று. (௧௦)

(திரிகூடருஞ் சாமானியத் திருநயனமென்றது; அக்கண் விசேடத்தால் அபராதங்கண்டபொழுது முனியப்படுமென்கின்றது.)

திரிகூடரு முன்கமலனைச் செப்பியிட நால்க
ளெரியிலங்கு வேள்வியினி னெந்தாய் - பரிதியினைக்
கண்பறித்து மங்கியினைக் கைதடிந்துந் திங்களினைப்
பண்பழித்த தென்னோ பகர். (௧௧)

(பசுவின்முலையிலே பால் பலித்தாற்போலென்கின்றது.)

ஈசன் குறைவறவே யெவ்விடத்து நிற்பனெனிற்
காசிமுத லாகும் பதிநதியாப் - பேசியதிங்
கேதோ புராணங்க ளெல்லா மிறைவனே
* தீதோவா நாயேற்குச் செப்பு. (௧௨)

(நமனுக்குச் சிவபக்தர்களை நலிய வதிகாரமில்லை யென்கின்றது.)

கற்பித்த நாளொழியக் காலனறு காதபடிக்
கற்பித்தா யெந்தையதி காரத்தைக் - கற்பித்த
வெல்லையின் வந்த யமனுயிரைக் கண்டயனுக்
கொல்லை யளித்ததுவென் னோது. (௧௩)

(அன்பை யுலகிற்கு வெளிப்படுத்த வேண்டுகையாலென்கின்றது.)

கண்ணப்பர் செங்குருதி மாறுகைக்குக் காளத்திக்
கண்ணப்பர் † கண்ணப்பக் காண்கையினாற் - கண்ணிரண்டு
மானிடதே கத்திலே மன்னியிடுந் தாதுவென்கொல்
‡ ஞானமயற் குள்ளது நாதா. (௧௪)

---

* தீது ஓவா எனப் பிரித்துத் தீயன புரிதற்கண் இடையறாத நாயேற்கு எனப் பொருள்கொள்க.

† கண் அப்ப எனப்பிரிக்க. ‡ ஞானமயன் - ஞானரூபன்.

(பக்தியினையே யமுஞ் சிவபுண்ணியத்தின்மிகுதியு மென்கின்றது.)

இணைமலர்கொண் டர்ச்சிக்க வேத்தா திடறும்
பணையனுயிர்ப் பாதகத்தைப் பண்ணிச் - சினமடைய
விட்டார் பிறர்க்கரிய வீடு விசாரசன்மற்
கிட்டியதென் னுடம்பிற் கே. (கரு)

(விஷ்ணுவினது அவதாரம் அவற்கு மாலாகையாலென்கின்றது.)
மால் - மயக்கம்.

நிதிநந்தா மண்ணிற் செனிப்பதுவு மன்றிப்
பதிபிறந்த கானிற் படர்ந்த - மதிகலங்கிப்
* பொய்ம்மானின் பின்போய்ப் புரிகுழலைப் போக்கியவ
ரிம்மாய மென்றேவெந் தாய். (கசு)

(விசுவரூபி சிவனெனறிய மால் அல்லவென்கின்றது.)

மாறுபாய்பின் மத்தடிபோய் மூப்பவர்மேன் மன்னுது
வாலயிடம் றான்முதுகில் † லந்தடிபோய் - ஞாலமெலாம்
பட்டதுவென் மண்சுமந்த போது பரகுருவே
சுட்டறியே னாயேற்குச் சொல். (கஎ)

(அருச்சுனற்குச்சொன்ன விண்டுகீதை, கொல்லவேண்டி மயக்கிச்சொன்ன நூலாகலின் என்கின்றது.)

அன்றோர் தவஞ்செய் தருநாலைக் கேட்டார்கள்
பின்றோர் கொலைசூழ்தல் பித்தாகு - மென்றே
வுரைசபிலா ஞானத்தைக் மாயவன்பாற் கேட்ட
விசையன்போர் வேண்டிடுகை மீண்டு. (கஅ)

சரியை.

(உபதேசித்த குருவினது திருமேனியை யனவரதமுந் தெரிசிக்கப்பெறிற் சாயுச்சியம் வேண்டா வென்கின்றது.)

ஞானக மங்களெல்லாங் கேட்டருணி நந்தீச
ராகுக முத்தி யடையாமல் - வானோங்கு
காரார் பிடற்றான் கயிலைமலைக் காவலாய்ச்
சாரூபம் பெற்றதுவென் றான். (ககூ)

(ஞானத்திற் சரியை யென்கின்றது.)

வன்றொண்டர் சம்பந்தர் வாகீசர் மற்றுமுள்ளோர்
பொன்றரிய ஞானம் புகுந்திருக்கச் - சென்று

* ய் ஆசெதுகை. † அந்த எனுஞ் சுட்டுச்சொல்லி னீற்றகரந் தொக்கது.

பதிதோறும் பாடிய பணிபுமதென் மாட
மதிதோ யருட்டுறைவாய் வந்து. (உ0)

## பூசை.

(பாவனைமாத்திரமெனகின்றது.)

பூதசுத்தி செய்யப் புகன்றாய்நின் பூசையினிற்
றீதி லுவாதாரத் தேசிகனைப் - போதமறக்
கூட்டுவெவன் றாயுயிரைக் கூட்டியபின் பூதசுத்தி
வேட்டவரா ரெந்தாய் விளம்பு. (உக)

(பஞ்சசுத்தி மனிதருக்கன்றிப் பிராணிகளுக் கல்லவென்கின்றது.)

பஞ்சசுத்தி பண்ணிச் சிவபூசை பண்ணவென
விஞ்சுநூ லெல்லாம் விளம்பிற்றேல் - செஞ்சடையா
யீயெறும்பு நாகம் புலிபிறவும் பூசிக்க
நேயமுடன் கொண்டதெவன் கொல். (உஉ)

(அசுத்தமாயா பதார்த்தங்களைச் சுத்தமாயையிற் றோன்றிய மந்திரங்களை சுத்திபண்ணத் தகுதியுடைய வென்கின்றது.)

மந்திரத்தைச் சுத்திக் கிரவிய மென்றதற்பின்
மந்திர சுத்தியினை வாய்மலர்ந்தீர் - மந்திரத்தாற்
சுத்திசெய வேண்டுதலாற் சொல்லரிய மந்திரங்கள்
சுத்திசெய்வ தெந்தவகை சொல். (உங)

(சிவன் நீக்கமற யாண்டும் நின்றாலும் அக்கினியைச் சொலிப்பித்தாற்போல ஆவாகனம் வேண்டுமென்கின்றது.)

எங்குமுள னீச னிலிங்கத்தே யெப்பொழுதுந்
தங்குவனென் றாகமங்கள் சாற்றியிட - லிங்கெனயா
டெவர் விலிங்கத்துச் சிருட்டிவழி யேசிவனை
யாவா கனமேனவாறு. (உச)

(சிவா திருமுகங்கள் படிகமாலையால் திக்குப்பாலகர்கள் நிறங்களின் பிரதிபிம்பமென்கின்றது.)

முன்னம்பலவுள் ளோர்பால் முதுலகின் * முன்ன
மும்பலவு மோரியல் பாய்மொழிவா - முகமைந்தில்
வன்னமே தங்கள்வர லாகாது வந்ததிறைக்
† கின்னபடியே யெந்தா யியம்பு. (உரு)

* முன்ன - முன்னிடத்தவான; இஃது இடைச்சொல்வழிவந்தவினை.
† 'இன்னபடியே' என்பதற்குப் பொருள் கொள்ளுங்கால், என்று என ஒரிடைச்சொல் வருவித் துரைத்துக்கொள்க.

(சர்வான்மாக்கள் மூகமுஞ் சிவனதிட்டான மென்கின்றது.)

மானிடர் தேவர்கள் விருத்தர் மடமாதர்
தேனிரக்குஞ் செஞ்சொற் சிறார்கடா - மானனங்க
ளஞ்சுஞ் சதாசிவனுக் கானதுவென் னையமறத்
தஞ்சவருண் மெய்கண்டாய் சாற்று. (உகூ)

(உத்தாதிக்குப்பலத்தையுறுமாகையாலேவிசேடமென்கின்றது.)

நாலுதிசை யும்முனைக்கு நல்லமுக மாமவற்றி
லேலுகின்ற பூசை யியற்றுமு - லாலநிழன்
முக்கணப்பா பூசிப்ப மூன்றுதிசை யும்மொழித்துத்
தெக்கணத்தி லேயிருப்ப தென். (உஎ)

(போசனகாலத்திலே பலியிட வேண்டுதலானும், ஆன்மபோத மறுகலை யருந்துதலானும், அவை மலசலங்களாதலானும், உத்தம பலியிட வேண்டுதலானும் நின்மாலியந் தவிரவேண்டுமென்கின்றது.)

ஐயைந்து மூர்த்த மரனுருவே யாயிருக்க
வையைய முதனமுதா செய்யமுது - * மெய்யன்பர்க்
காகாது மற்றவர்க ளம்முதல்வற் கானதுவும்
யோகா லயனே யுரை. (உஅ)

## தராபூர்வம்.

(ஆன்மா அறிதியாகையால் உடல் பொருளாவி மூன்றுஞ் சிவனுடைய வென்கின்றது.)

காயமுட னாவி பொருளுங் கடவுளே
தோயமுட னேகொடுக்கச் சொல்லியதென் - னேயுந்

* நின்மலனாகிய இறைவனுக்கு நிவேதித்த அன்னபானாதிகள் மிகத் தூயவாதலால் உட்கொடலமையாது; அப்படி உட்கொள்ளா ராயின் நிரயத்துன்பத் தழுந்துவர். அன்றித் தனக்குமேற் பிறிதொரு கடவுளிலாத இறைவனுக் கேற்பித்த நின்மாலியத்தைப் பிற கடவுள ரேற்குமாற்ற லிழத்தலின், போசனகாலத்திற்றும் செய்தற்குரிய பூசனைகள் செய்யலாகாமையானும், அது 'மெய்யன்பர்க்காகாது' எனவும், வினைக்கடவுளர் நின்மாலியங்களாயின் உட்கொடல் சாலுதலின் 'மற்றவர்க ளம்முதல்வற் கானதுவும்' எனவும் மேற் குருமுரைத்த கருத்துரைக் கிணங்க இந்நூலாசிரியர் கூறினார். சைவசமய நெறியுடையாரும், "மிசைவியே லன்பர்க்கதிபாதக மருந்திறல்" எனவிலக்கியும், "மற்றைப் பரிவாரத் தார்மா லியந்தானுங், குற்றமல மாந்தல் குணம்" என விதித்தும் போந்தவாறறிக.

தனதுபொரு ளேகொடுக்கை தன்ம மவைமுன்ன
முனதோ வெனதோ வுரை. (உகூ)

(கிரியாபாதத்திலே சொல்லுதலானும் வாதனையென்பது பற்று வகையாதலானும் பலமதிகமாதலானும் வேண்டுமென்கின்றது.)

காய மெனதுயிரென் கைப்பொருளு மப்பொழுதே
தோயமுட னின்பாற் றொகுத்திருக்க - நாயகனே
பூசைஜப மோமபலம் பூரீ ருடனளிக்கப்
பேசியதென் றோடாறும் பின். (௩௦)

(தாணிழல் நிற்க வென்கின்றது.)

பொருளுடல மாவியினைப் புண்ணியனுக் கீய
வருளினுய் வெண்ணெ யரசே - யருள்தனை
யெய்த்த விரண்டினையு மீதலா லென்றனையு
மீர்தபடி யெவ்வா றிசை. (௩க)

போக விழிவு.

(* அறிந்த விடத்தில் பழுத்தவாதனையா லென்கின்றது.)

மாலாதி வாழ்வு மருவுமன வென்றுபல
நூலா லறிந்தவினை நோக்கிவரு - காலானே
பொல்லாத வின்பம் புலையன் புரியுமதே
னில்லா வுடம்பெடுத்து நின்று. (௩உ)

(ஞானதிட மில்லாமையாலென்கின்றது.)

நயக்குவிட யங்தோறு நான்மயங்கிச் சுற்றி
வியக்கு மருளால் விழிக்கக் - † கயத்தான
மாகாதோ வம்மா வளவில்பல வித்தாகிப்
போகாதோ வெந்தாய் புகல். (௩௩)

சிருட்டி.

(‡ ஆன்மாவுக் குடம்பு சகசமென்கின்றது)

கன்மஞ் சடங்கன்மலங் கூடுங் கருத்தில்லை
நின்மலனுங் கூட்ட நினைந்திடான் - மன்னுயிர்க

* அறிந்தாங் கறிந்தாங்குத் தோன்றிய பொருட்கண் அறிவு பற்றி முதிர்தலின் ஆண்டுறைத்த பழக்கத்தை நூற்பயிற்சி மாத்திரையானே ஒழித்தல் சாலாமையின் இங்ஙனங் கூறினார்.

† கயத்தானம் - கயம்=ஆழம், தானம்=இடம், ஆகவே ஆழிய விடம்; என்றது நண்டுக் கேட்டை யெய்துதற்பொருண்மேற்று.

‡ "மும்மல நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல்" என்னும் வழிநூலானு முணர்க.

டாளு யுடம் பெடுக்குந் தன்மையிலை யெவ்வாறு
கோனே யுடம்பெடுத்தல் கூறு. (௫௪)

(* சிருட்டி நான்கு விதமாகலா னிது வாக்கின் சிருட்டியென்கின்றது.)

காரணத்திற் றோன்றுமுறை காரியங்க டோன்றாமென்
றாரணங்க ளோது மதுவொழியப் - பூரணமே
வந்தபடி யென்மாதா வின்றிக் † கராவின்வாய்
மைந்தனும் பூம் பாவையுமிம் மண். (௫௫)

(கேவலத்திலுங் கன்மமே காரணமானபெண்ணுக வருப்புண்டதென்கின்றது.)

நாலும்பெண் ணின்றியா ரூடலுள தாகாதிங்
காணும்பெண் ணின்றியுள தாகாது - காணுமே
மாற்றரிய கேவலத்தின் மன்னுமுயிர் கட்குடம்பு
தோற்றுவித்த தெவ்வாறு சொல். (௫௬)

(பஞ்சமலங்களு மூன்றுதிறத்தார்க்கு மொத்திருக்கவும் கன்மமு மாயையு மவர்களை வாதியா வென்கின்றது.)

‡ மூன்றுதிறத் தார்க்குமல மூன்றிரண்டொன் றாமொழி
யென்றவினை மாயை யிலாதவர்க்குத் - தோன்றுவது [ந்த
தாக்கசுக முற்றதுவு மற்றுந் தொழில்மூன்றுந்
தொக்க வருட்டுறையாய் சொல். (௫௭)

## பூததரிசனம்.

(பஞ்சகிருத்திய விதியைப் பார்க்கத் தெரியுமென்கின்றது.)

பூதங்கள் மாறுபட்டுத் தம்மிற் பொருந்தாமை
வேதங்க ளோதியிட வேண்டுமோ - நாதனே

---

* மீனைப்போல் நோக்குதல் மாத்திரையானே சிருட்டிப்பதும், கோழிபோற் பரிசமாத்திரையானே சிருட்டிப்பதும், ஆமைபோல் நினைத்தல் மாத்திரையானே சிருட்டிப்பதும், இஃதிவ்வாறாகுக என வுரைத்த மாத்திரையானே சிருட்டிப்பதுமெனச் சிருட்டி நால்வகைத்து.

† ஆளுடைய நம்பிகள் முதலைவாய்ப்பிள்ளையை யழைத்ததும் ஆளுடைய பிள்ளையார் என்பைப் பெண்ணாக்கினதும்.

‡ மூன்று திறத்தராவார் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்பவராம். இவர்க்குமுறையே ஆணவமும், ஆணவமுமாயையும், ஆணவமாயை காமியமு முள்ளனவாம்.

நாட்டியபே ரன்பிலா நாயேற் குடம்பாகக்
கூட்டியதென் மெய்கண்டாய் கூறு. (௩அ)

(சொல்லப்படும் பதார்த்தங்களெல்லாங் கூடுதலாமென்கின்றது.)

அன்னமெனி னுளும் வளருமைம் பூதமல்ல
பின்னமெனின் மாயை பிறங்கருவ - முன்மே
யிந்திரிய மென்னின் மரத்துறுவே னிவ்வுடலம்
வந்தபடி யெந்தாய் மதி. (௩௯)

(காரணம் காரியத்தை விட்டிராதென்கின்றது.)

சத்தாதியிற் றோன்றும் பூதாதி தானென்றாய்
சத்தாதி பூதத்தே சாருமெனி - லத்தாலே
காரணத்தைக் காரியத்தின் றன்குணமாக் கற்பித்தல்
பூரணமெய் கண்டாய் புகல். (௪0)

(பிரமாண்டமளவும் பிருதிவிக்கு வியாத்தி யென்கின்றது.)

மண்ணும் புனலு மனல் வெளி மாருதமும் [ன்று
விண்ணுமிவை யோங்கொன்றின் மேலாகு - விண்ணி
மண்மாரி வந்தபடி வாய்மவரால் வல்வினையேன்
கண்மாரி மெய்தாய் கலந்து. (௪௧)

(யாதனு சரீரமென்கின்றது.)

ஐயமிடுங் கால நிரயத் தழுந்துதல்
வெய்யவுயிர் தூலவுடல் விட்டுவிடு - மெய்கண்டாய்
சூக்கவுட லன்ப முறுமென்னிற் றோயாது
தாக்கியதய கெவ்வுடம்பிற் றான். (௪௨)

காலநிச்சயம்.

(வித்திவ், நிலனு நீருமுண்டாயினுங் காலங்கூடியவழி யல்லது முளை தோன்றாதென்கின்றது.)

பதார்த்தவியல் பின்றிப படைத்தழிக்குக் காக்கை
யெதார்த்தமே காலமுள தென்னு - *நிதார்த்தவனே
யால்மிலாக் கண்டா வருள்வெண்ணெய் மெய்த்தேவே
காலமென்ப துண்டாகிற் காட்டு. (௪௩)

(மகாமேருவை நடுவாக்கினல்லது திக்குத்தோன்றாதென்கின்றது.)

வடக்குத்தெற் கென்னு மொருவன்று னன்றே
குடக்கைக் கிழக்கென்று கூறுங் கடைப்புலையே

* நிதார்த்தவன் - உண்மை யுணர்வித்தவன்.

ஞலுதிசை யீதென்று நாடரிதா னன்றாக
* வேதும்வகை யெந்தா யியம்பு. (௪)

தத்துவம்.

(† பொய் என்பது நிலையுதலில்லாப் பதார்த்தத்தை உண்மைக்கு மறுதலையன்றென்கின்றது.)

பாரிற் கடங்கள் பலவொடுங்குங் காரணம்போற்
காரியமாந் தத்துவங்கள் காரணத்தே-சேருமெனின்
மெய்கண்ட தேவனே வெண்ணெய்வரு வித்தகா
பொய்யென்ற தெத்தைப் புகல்? (௪௫)

(அசுத்தமாய காரியம்போலச் சடமல்லவாகலானும் காலதத்துவத்தைக் கடந்தன வாகலானு நித்தமென்கின்றது.)

தாவிலா மூவர்களுந் தத்துவமா கிற்சடமாய்
‡ மேவி யழிந்திடவும் வெவ்வேறே-தேவனே
சுத்த மெனினுதந் தான்விடயந் தானழியு
நித்தமென்ப தெவ்வாறு நீ. (௪௬)

கன்மம்.

(அத்துவாவே யினனுக் குடம்பானமையால் தோன்றினவிடத்தே கிடக்குமென்கின்றது.)

ஒன்றுபோ லொன்றிரா தத்துவா வின்னுண்மை
துன்று மலந்துரந்த சோதியே-யொன்றி
யிடைந்த விருவினையும் வேறுபடா தாறி
லடைந்தபடி யெவ்வா றருள். (௪௭)

---

* தேமாங்கனி யெனக்கொண் டிச்சீரை யடிகிடின் வெண்பாவினுள் வாராவென்று விலக்கிய வஞ்சிச்சீரை தட்டு வெள்ளோசை சிதையுமாகலான், "சொல்லாரும் வல்லின மெல்லினமோ டிடைத் தோன்றுமொற்று நில்லாது" எனும் பழம்பாட்டின்விதி சழீஇ இடைநின்ற மவ்வொற்று நீக்கிக் கூவிளங்காய் என அலகிட்டுக்கொள்க.

† "நீரிலெழுத்து நிகழ்கனவும்" என்னுமுதனூலினும் ஆசிரியர் சிவஞானயோகிக ளிவ்வாறே கூறிப்போந்தமை காண்க.

‡ "மேவரிய வந்தழியும் வட்டமெனில்" என்னும்பாடம் பொருட்கேலாமையின் இவ்வாறு மாற்றப்பட்டது.

ஆறந்த வாவி * லிடையும்வினை யென்றுரைத்தா
யாறத்து வாவை யருளினாற்-கூறிட்டுச்
சோதித்த பின்னுந் தனுமுதலுந் தொல்வினையும்
பேதித்த தெவ்வாறு பேசு. (௪௮)

(கோவதை எக்கியத்தாற் போகாதென்றும் பதினாற் பிராயச்சித்தத்தாற் போமென்றுங் கூறுகின்றது.)

ஒன்றினா லொன்றொழியா தென்றுரைத்து மற்றந்த
வொன்றினா லொன்றழியு மென்றவுரை-பொன்றாமற்
கன்மத்தின் றன்பகுதி காட்டாய் கருணையுரு
வென்னு மெய்த்தேவே யெனக்கு. (௪௯)

(பிராரத்தகன்மந் தொலைதற்பொருட் டென்கின்றது.)

திருவருளா லொன்றுந் தீட்சையினா லொன்று
† முருவிகற்ப மைந்தினா லொன்று-மருவி
யொழியாருந் தேவே வினைமூன்று மேகிற்
சமையாசா ரம்மெனக் கென்றான். (௫0)

(மிருகபட்சிகளை யொழிந்தொழிந்தோர் வினையை விடல்வேண்டும்; விடுவாரை வினைதொடர்ந்து புசிப்பியா தென்கின்றது.)

உள்ளதே யாகி லொருவழியா லூட்டுவிக்கு
மில்லதே யாகிலவந் தெய்தாது—நல்ல
வுறவே திருவெண்ணெ யுந்நமனை யந்த
துறவேது சொல்லாய் துணிந்து. (௫௧)

(பதிவாக்கியத்தாற் கொலையன் றென்கின்றது.)

சமிதையெனும் பீக்குப் பிராயச்சித் தத்தை
யவையடைவே செய்யென் றறைந்தா-ரிமையோர்
நசிக்கவரு நஞ்சுண்ட நாதாயா கத்திற்
பசுக்கொலையேன் சொன்னாய் பகர். (௫௨)

---

* சஅ - வது செய்யுளில் அலகிட்டாங் கிதையு மலகிட்டுக்கொள்க.

† 'உருவிகற்பமைந்தினால்' என்பதற்கு ஐந்தெழுத்தை மாற்றியுரைக்குமதனா லெனக.

கிரியாதீட்சை பண்ணினுலொழிய ஞானமுண்டாகா தென்கின்றது.)

ஞானத்தால் வீடென்று நாட்டியபி னன்முத்தி
யீனமிலாத் தீட்சையா லென்பதுவென்-மோன
மொழியா யொழியர்வென் முன்னைவினை மாய்த்த
விழியாய்மெய் கண்டாய் விளம்பு. (ருங)

(* சமாதியுடையவர்கள் கருத்திசைந்தாலு நிறுத்தினுல் நிற்கு மென்கின்றது.)

யாதொன்றிசையி னிறையருளி னுலசைவென்
ளுேதுகின்ற வேதத்தி னுண்மைக்குப்-போதுமோ
முத்த ருடற்கமைத்த முன்னைவினை தானிருக்க
சித்தமொருக் கென்றிறை செப்பல். (ருச)

(கன்மத்துக்கீடான போகத்தைப் புசிப்பானென்கின்றது.)

ஏயுங் கருமமிதமகித மென்றிரண்டாய்
மாயையொரு நாலாக மன்னியிடுங்-காயமுத
ளுெல்லை யிருவினையோ போகமோ துய்த்தலுயி
ரெல்லையின்மெய் கண்டா விளம்பு. (ருரு)

(முகமும் உரையும் வேறுபடாதபோது ஸ்திரீபுருடர்கள் தம்மின் மயங்கியும், அதுவன்றி, அவனவனுசிரம மயங்கியும் பட்சிமிருகம் போலப் பாவமொழியப் புண்ணிய மேறுமென்கின்றது.)

முகவுரைகள் வேற்றிமைக்க முன்னைவினை யேது
நகும்வினைக ளேதெத் தனையும் - புகல்கின்ற
பெண்ணு ணிருதிறத்தார்க் குண்டாடும் பெண்ணைசூழ்
வெண்ணெய்மெய் கண்டாய் விளம்பு. (ருசா)

(ஊழளவிலே நிறுத்துமென்கின்றது.)

வாகட தந்திரத்துக் கன்மயோ கத்துவழி
நேர்பட நின்றவர்க்கு நீட்டிக்கு - மாகங்

---

* இதனுல், ஆன்மாவுக்கே யுரிய வறிவுளதென்பதும் அவ்வறிவால் முயலுங்கருமம் வீண் போமாறில்லை யென்பதுந் தெரிக்கப்பட்டது. ஆசிரியர் பெருநாவலரும் "முயற்சி தன் மெய்வருத்தக் கூலி தரும்" என்றதூஉ முணர்ந்து கடைப்பிடிக்க.

கருமத் துளவென்று கற்பித்த லென்னே
பெருநூலிற் சொன்னவா பேசு. (ருஎ)

மாயை.

(மாயையொழியவுஞ் சத்தாதியும் பிரகிருதியும் கலையுமாக உபா
தானத்திரய முளவென்கின்றது.)

அருவாகு மாயை யுருவாகி * னந்து
முருவாகுங் காரியமுண் டாகைக் - கொருகா
ரணம்வேண்டு மாகையாற் காரணனேகா
ரணமீது காணென்ன் றிசை. (ருஅ)

(அவர்கடேகமடங்கலுங் கற்பூரதீபம்போலு மென்கின்றது.)

அந்தமுறுங் காரியங்கள் காரணத்தி லேயன்றி
நந்தலுறா தென்னுமை ஞானசம் - பந்தன்
றிருமணத்திற் சென்றவர்க டேசிகனே தெய்வப்
பெருமணத்திற் புக்கதுவென் பேசு. (ருகூ)

(இரண்டும் பசுவின்கொம்புபோலப் புராதனமென்கின்றது.)

காயந் தனையின்றிக் கன்மமுள வாகாது
மாயைவினை யின்றியுடல் வாராதிங் - காயுமறி,
வெந்தையே யெண்ணெ யிறைவனே மற்றிவற்றின்
முந்தியதிங் கேதோ மொழி. (சு0)

ஆணவமலம்.

(அருளுமலமுஞ் சுடரு மிருளும்போலல்ல; அங்ஙன மாணவ
மில்லையாயிற் செனனமுண்டாகா தென்கின்றது.)

சுடரா விருடேடச் சொல்லார்க ளெந்தாய்
சுடரா விருடேடச் சொன்னாய் - சுடர்கின்ற
ஞானத்தா லாணவத்தை நாடரிது நாடுவதென்
ஞானத்தா லாணவத்தை நான். (சுக)

---

* நந்தும் - கெடும்; 'னன்றழியும்' எனும்பாடந் தளை சிதைய
நிற்றலின் 'நந்தும்' என மாற்றினும்.

* (தண்ணீர் தீயின் சையோகத்தானே வெம்மைபெற்றழியுந் தண்மை யழியாததுபோ லென்கின்றது.)

மூலமல மென்று மழியா முதலாமென்
றால நிழற்கடவு ளன்றறைய - ஞாலத்தி
னாதித்தன் சன்னிதியி லந்தகா ரம்போல
வோதிற்றென் மெய்கண்டா யுற்று. (௫௨)

திரோதானம்.

(மாதாவானவள் கண்ணைமறையாதபோது பிள்ளை மருந்தருந்தா தென்கின்றது.)

† பஞ்சசத்தி தன்னிற் பரனருளைப் பண்டிதர்கள்
சிந்திப் பரிய செழுஞ்சுடரை - யெஞ்சா
வலதி லுயிர்க்குணர்வை யானந்த வாழ்வை
மலமென்ப தெவ்வாறு மன். (௫௩)

---

* தண்ணீர்க்குக் குணம் தட்பம். இது தண்ணீர் தோன்றுங்காலத்துத் தானு முடன்றோன்றி யஃதழியுங்காற் றானு மழிவெய்தும். எனவே ஒருபொருட் பண்பென்பது அப்பொருடோன்றுங்காலத்து டன்றோன்றி யஃதழியுங்காற் றானு மழிவதாம். இது நச்சினார்க்கினிய முதலியவற்றானு முணர்க. இவ்வாறன்றி யொருபொருட்க ணிடைத் தோன்றுவனவெல்லாம் அதன்கண் நிலையுதலின்றி யழிதன்மாலைய வாம். தீயின் சையோகத்தைப்பெற்ற நீரின்கட் டண்மை காணப்படுத லின்றி வெம்மை காணப்படுதலும், ஆறவைத்த வெந்நீரின் கணுள்ள வெம்மை யழிவெய்தித் தண்மை தோன்றுதலுங் காணலுறுவார்க்கு இடைத்தோன்றிய வெம்மை, நீரின்குணமாகாது தீயின் சையோகத் தால் நிகழ்ந்த நிகழ்ச்சியாமென்பதூஉம், அவ்வெம்மை தோன்றியு வழி நீரின்குணமாகியதண்மைபுலப்படாது கரந்துநின்றதென்பதூஉம் இனிது போதரவே "தீயின் சையோகத்தானே வெம்மைபெற் றழியுந் தண்மை யழியாதது" என்று கூறினார். வெந்நீரின்கட் டட் பம் அழிந்தறுமென்பார்க்கு நீரிற் பண்பாகிய தண்மை யழிந்தழி நீருமழியுமென்பது மரபாதலானும், அவ்வாறு வெந்நீர்க் கண்ணழிவு காணுதலின்மையானும், ஆறியவெந்நீர்க்கட் டட்பமறித்தும் புலப் படுதலானும், ஒருபொருட் கண்ணதாகிய தன்மை யழிவெய்தி மறித் துத் தோன்றுத லியாண்டு மின்மையானும் அது சாலாமை யறிக.

† பஞ்சசத்தி, சிந்திப்பு - மெல்லினவெதுகை.

## சத்திநிபாதம்.

(அரசாக்கினை யெல்லார்க்கு மொத்திருக்கையிலேயுங் கோப பிரியங்க ளுண்டானபோது விசேடித்து இராசாக்கினை யுண்டாமென் கின்றது.)

அருளொழியிற் றொன்று மறியா துயிர்க
ளருளைப் பொருட்கு மறிட் டான - மருளேகினை [மே
றெச்செயலுஞ் செய்ய வெழில்வெண்ணெய் மெய்த்தே
சத்திநி பாதமெனக் கென்றான். (௯௪)

(பரமாசாரிய ரொழுகதற்குரிய ஞானமே விலையொப்பென்கின்றது.)

முற்பிற்பா டின்றி முளையா திருவினையு
* மற்பமணர் கூனிலே யானையர - நற்செவிய
னிப்பதற்றன் பங்க னிரண்டுமொரு காலத்தே
முன்புற்ற தெந்தாய் மொழி. (௯௫)

(பரமசத்தி பதியாதபடியினாலே மோட்சத்திலே விருப் பமிக முண்டாயிற் றிலையென்கின்றது.)

சத்திநிபா தந்தான் சகலமு மொத்திருக்க
முத்திவிருப் பெய்தா முறைமைதா - னத்தாலே
வெண்ணெய்ப் பதிமகிழு மெய்கண்ட தேவேதன்
பெண்ணைக் கதிபதியே பேசு. (௯௬)

(பதார்த்த மெல்லாவற்றிற்கும் பக்குவம் வேண்டுமென்கின்றது.)

பருவத்தைத் நாடியேதன் பாசஞ் சடங்க
ளருளுமரு ளோரியல்பே யாகுந் - தெருளாத
மக்க ளுயிர்க்கிளமை மூப்பில்லை மெய்கண்டாய்
பக்குவமே துக்குப் பகர். (௯௭)

(முற்பிற்பா டில்லையென்கின்றது.)

தன்னை நிகரில்லாச் சத்திநிபா தந்தானே
மன்னுமல பாகமோ மாந்தர்க்கு - முன்னமே

---

* அற்பஅமணர் கூனில் ஏயான் உயர என்று பிரித்து இழிந்த அமணர்தங் கோட்டமுடைய கூற்றைத்தழீஇ ஒடுங்கிய கூன்பாண்டியன் சோர்வெய்தவெனப் பொருள் கொள்க; கூன் ஈண்டு. இரு பொருட்டு சொற்கோட்டம், உடற்கோட்டமென.

யுண்டான தேதென் றுரையாயென்னையடிமை
கொண்டாய்மெய் கண்டாய் குறித்து. (கூஅ)

(விரைவி லோடுவோனுக்குக் * கவர்த்த வழி யெதிர்ப்பட்டார் திகைப்பு வருமாறுபோல இருவினையொத்த வெல்லையின் ஞானதாக முண்டாமென்கின்றது.)

எண்ணொப்பா லொப்போ வியற்றியநா ளொப்போதா
னுண்ணுமரு ணீர்மையினு லொப்பாமோ-திண்ணமுற
வத்துவா வாறி லடைந்தவினை யும்முயிரு
மொத்தபடி மெய்த்தேவே யோது (கூகூ)

அவத்தை.

(இதமகிதம் புசிப்புற்ற படியாலென்கின்றது.)

நிலாவு சகலத்தி னின்றபூ தாதி
கலாதி சிவாதி கழித்துக் - குலாவியநூல்
வாட்டிய சாக்கிரத்தில் வாயுவச னாதிகளைக்
கூட்டியதென் மெய்த்தேவே கூறு. (எO)

(சொற்பனத்தினுலு முண்டா முறைமை யுண்டாமென்கின்றது.)

சாக்கிரத்தி லுள்ள கருவிகளுந் தானில்லைத்
தாக்கரிய சொப்பனத்திற் றுக்கசுகந் - தாக்குஞ்
சகலவத்தை போலவதிற் றாக்கியதங் கேதோ
விகலறமெய்த் தேவே யியம்பு. (எக)

(பிராணவாயு உடலுக்குக் காவலென்கின்றது.)

தத்துவங்கள் சற்றுஞ் சலியா வதீதத்தே
யொத்தரிய வான்மா வொடுங்கிடவும் - பெத்த

---

* ஒருநெறியிற் பிரியும் பலநெறி. கவர்த்தநெறி யெதிர்ப்பட் டுழித் தான்சேறற்குரிய நெறிக்கண் மிக்கவாராய்ச்சி யுண்டாதல் போலப் பெருவேட்டையுடன் ஞானநிலை முதிர்ச்சி யெய்துதற்கு ஆராயுமெனக் கவர்வழித் திகைப்பு ஞானதாகத்திற் குவமையா மென் றிக. இச்செய்யுளில், ஞானதாக முண்டாம்பொழுதே யிருவினை யொப்பை யறிதற்குக் குறியாமன்றி எண்ணாலும், நாளாலும் பிறவற் றாலு மன்றென வற்புறுத்திய வாறும்.

* சகலத்திற் போலப் பிராணன் சலித்து
மிகவழுங்கன் மெய்த்தே விளம்பு. (எஉ)

† (சொற்பனத்தினின்று சுழுத்தியிற் போகலானும், சொற்பனத்தினின்று சாக்கிரத்தில் வருதலானு மென்கின்றது.)

கண்ட கனவை மறந்துமற வாதுகண்டு
கண்டபடி யேயுரைக்கக் காரணமேன் - கொண்டலணி
தேமாம் பொழில்வெண்ணெய்த் தேசிகா நேசியா
யாமா றடியேற் கருள். (எங)

‡ (சுத்த தத்துவத்தைக் கொண்டறிவ னென்கின்றது.)

அவத்தை யடையுங்கா லவையறிய லாகா
வவத்தையறி யின்புலங்க ளாவ - தவத்தையைநின்
போதமுட னின்றறிவ னென்னிற் பொருத்தியதற்
கேதிடமெய்த் தேவே யியம்பு. (எச)

(ஆன்மா வறிவே கிஞ்சிஞ்ஞனாகையா லான்மபோத நித்திய மென்கின்றது.)

அறியு மிடஞ்சகல மங்குமனம் பற்றி
யறியா விடங்கே வலமா - மறியு
மறிவழியி னைய மறிவரிதா மத்தா
§ வறியும்வகை யெவ்வா றருள் (எரு)

---

* 'சகலவத்தைப்போல' எனும் பாடம் பொருட் கியைந்திலது.

† கண்ட கனவை மறத்தற்குச் சொற்பனத்தினின்று சுழுத்தியிற் போதலும், மறவாது கண்டு கண்டபடியே யுரைத்தற்குச் சொற்பனத்தினின்று சாக்கிரத்தில் வருதலு மேதுவாகக் கொள்க. எனவே, ஒடுங்கு முறைக்கட் கண்டகனு மறந்துந் தோன்றுமுறைக்கட் கண்டது புலப்பட்டு நிற்குமென்பது பெற்றாம். இறங்கும்போதும் ஏறும் போதுங் கனவுத லுண்டென்பது முதனூலில் ஆசிரியர் சிவஞான யோகிக ளுரைத்தருளியவாற்றானுங் காண்க.

‡ "ஐந்து சாக்கிரத்தின்" என்னும் வழிநூற் சூத்திரயாப்பிற்கு ஆசிரியர் சிவஞானயோகிகள் கூறிய உரையானும், அவத்தையிற சுத்த தத்துவத்தைக்கொண் டறியுமாறு காண்க.

§ தனைகொள்ளு முறை மேலுரைத்தாம்.

## ஆன்மதரிசனம்.

(மனமயங்குகையால் * சடப்பிரமாணங் கொண்டறிய வேண்டு மன்கின்றது.)

என்னை யறிய விரண்டா யிடுவானன்
றன்னையறி யெனைச் சடமாவன் - மூன்றுமே
யெவ்வாறுங் காணாமைக் கரிந்த விலதாய
னெவ்வாறு காண்பே னெனை. (எசா)

† (வாரிநீரில் லவணம்போ லென்கின்றது.)

உனக்கு மெனக்கு முளதாகு முண்மை
யெனக்கு முனக்குமிவ் வில்லை — யெனைக்கு
முனைமறைப்ப தின்றி யொழியாமற் பாச
மெனைமறைத்தன் மெய்கண்டா யென். (எஎ)

‡ (பதியினுடைய வியாத்தியும் பாசத்தினுடைய வேகதேசமு மில்லாமையே யுயிருண்மை யென்கின்றது.)

பூரணமே யாகினுயிர் போக்குவரத் தில்லையா
மோரிடத்தே யாகிலதத் தாலொழி - யோரிரண்டு
மோதுமுயிர்க் குள்ளதே யோரிரண்டு மில்லையா
மீதுயிரி னுண்மையெந்தா யென். (எஅ)

---

* சடப்பிரமாணமாவது - சருக்கநூலிற் கூறிய பிரமாணங்கள் மூன்றும், ஆறும், பத்தும், பிறவும்.

† வாரிநீரில் உப்பு இடையிற் றோன்றாது தொன்றுதொட்டுக் கூடியிருத்தல்போல ஆன்மாவிற் பாசமும் அநாதிசையோகமுடையதாமென்றபடி.

‡ என்றது, பதியைப்போற் சமநிறைவுடையதாகாது பிராயிகம் பாசத்தோடியைக் திருத்தலே யுயிருண்மையாம்; "அசித்தருவியாபகம்போல்" என்னும் வழிநூலினும் ஆசிரியர் சிவஞானயோகிகளுரைத்தவாற்று னுணர்க. அதுவதுவாய் வசிப்புண்ணும் வியாபகமுடையது ஆன்மா வென்றபடியாம்.

## கர்த்திருபாவநீஸ.

(சகலதேவர்களுஞ் சிவன் வயத்தராகலானும் அவன் நினைத்த பண்ணமுடியு மாகலானு மென்கின்றது.)

ஓரம்பே கல்விற்கை யாற்றதூவு மெய்ஞ்ஞான
வீரன் *கைமெரியால் வெந்ததுவுங்-காரவுண
ரெல்லாரும் வேவமெரி மூவ ருயர்ந்ததுவுஞ்
சொல்லாய்மெய் கண்டாய் துணிந்து. (அச)

(ஆபுதரூபங்களாயிருக்கச் செய்தே தியானம் பண்ணுவதிற் புண்ணியமுண்டா மென்கின்றது.)

நகைபி லுதைபி னகத்தி னயனத்திற்
பகைதணிக்க வல்ல பரனே-தொகையின்
மழுமுதலா மாயுதங்கண் மன்னுயிர்கள் போலக்
கெழுமுவதென் னுங்கர்த்திற் கே. (அரு)

(விசுவநிமித்தமாகச் செய்ததொழிற் கடவுளுக்கு விடயமில்லை யென்கின்றது.)

+ பெண்பா லுவந்த பெரும்பித்த னுயிருக்கக்
கண்பாவு நெற்றிக் கடவுளை-மண்பா
லொருங்கே விரையத் துறந்தார்த முள்ளப்
பெரும்பயனீ யென்பதுவென் பேசு. (அசு)

(கடவுள் போகியல்ல வென்கின்றது.)

சிந்தா மணிசங்கு தேனுவுந் தாமரையு
மைந்தருவு முன்னதே யாயிருக்க-‡வெங்கோதான்
§ கச்சவிட முண்டிருண்ட கண்டா கண்டோதாறும்
பிச்சையிரந் துண்டதுவென் பேசு. (அஎ)

(வருணச்சிரமமல்லாத சுவேச்சாவொழுக்க மென்கின்றது.)

இழிந்தோர்கள் கூத்தாட வேதுவா யெங்கு
மொழிந்தோர்க ளேக்கி யுவப்பாகத்-தொழுந்தேவர்

---

* கை என்பது லகாரங் குறின் மாத்திரைத்து; என்னை? "ஐகார னைவேலோருங் குறிலியல்" என்பதோத்தாகலான்.

+ கடவுள் பெண்பாலுவந்த பித்தனுயிருக்கத் துறந்தார்த முள்ளப் பெரும்பயன் என்பதுவென்னீ எனப்பிரித்துக் கூட்டுக.

‡ எங்கோ (திசைச்சொல்) என்னே.

§ கச்சம் - இருள்; கச்சளம் என்பதனிறு தொக்கது.

பேய்ப்பாடல் கேட்டுப் பெரியோய் பிணக்காட்டிற்
கூத்தாட லென்னோ குறித்து. (அஅ)

(இதுவுங் கடவுள் போகியல்ல வாதலானும் இடபந் தன்சொரூப மாதலானும் அதனையே முன்னிட்டுக் கொண்டதென்கின்றது.)

அந்தரத்தே வந்துலவு மாதித்த ருக்கமா
ரிந்திரர்க்குஞ் சோமற்கும் யாவர்க்கு-மெந்தை
கடகரியுந் தேரும் பரிமாவுங் கற்பித்
திடபமுவந் தேறியவா றென். (அக)

(சமுத்திரத்திற்குச் சுழியு நீரோட்டமு முண்டாயினுற்போல வென்கின்றது.)

நிற்கவிடம் போதாது நின்னுடைய பூரணத்துக்
கொற்கமிலா வீசா வுமைக்காணப்-பொற்பொதுவி
லாடியதென் றாதா யலம்வந்த தேன்கடுகி
யோடியதென் பன்றியின்பி னுற்று. (கூ0)

உண்மைநிலை.

* (ஓதியுணர்ந்தார்க்கொழியத் தத்துவமசி, துவைதம் என்னுஞ் சொற்களைப் பிறர்க்குரைத்த லாகாதென்கின்றது.)

திருவாதவூரார்க்குச் செப்பரிய முத்தி
யொருவா சகத்தி லுணர்த்திக் - குருவாகித்
தேவர் மறையுஞ் சிவாகமமு மற்றுமுள்ள
† மூவாறுஞ் சொன்னதுவென் பேசு. (கூக)

---

* இழூன்னன ஓதி யுணர்ந்தார்க்கே மேலுள்ளன வுணர்த்தற்பால வென்னு மரபு: "ஆறறி யந்தணர்க் கருமறை பல பகர்ந்தும்" எனுங் கலித்தொகைச் செய்யுளானும் அதன் நச்சினார்க்கினிய ருரையானு முணர்க.

† பதினெண்புராணம்; உபலக்கணத்தான் ஏனையவுந் தழீஇக் கொள்ளப்படும்.

யற்பி னருமறைக ளத்துவித மென்றறையுஞ்
சொற்குப் பொருளேது சொல். (கசு)

(நூல் சொன்னபடியே செய்தலிறை செயல், அது செய்யாது தவிர்தல் இறைசெயலன் றென்கின்றது.)

எல்லாச் செயலு மிறைசெயலே யென்பதுவு
மெல்லாச் செயலு மிறைசெயலாய்ச் - சொல்லாத
தெப்படியே யென்னு மெனதையந் தீரவினி
யிப்படியே யென்னு மிறை. (கஎ)

(பசுகரணமாறிச சிவகரணமாய் நின்றறிக வென்கின்றது.)

* ஞான மொடுஞேய ஞாதுருவு மாய்நீரி
லீனமாய் ஞேய மிறந்துவிடு - மான்மாவை
யின்றி யுணருமவற் † கொன்று மறிவரிதா
நின்றறிய வெந்தாய் நினைத்து. (கஅ)

(சீவன் முத்தருக்கொழிய வுணரு முறைமை தெரியாவென்கின்றது.)

பாச மடுத்தாற் றெரியா பதியுண்மை
யீச னடுத்திடினு மிவ்வியல்பே - பாசத்தி
னுண்மைபதி யுண்மை யுணரும் வகையுணர்த்தாய்
வெண்ணெய்மெய் கண்டாய் விரைந்து. (கக)

(‡ ஞாயிற்றின் முன்னிலையிற் கண்படல நீங்குவ தொழியப் பிரகாசம் வந்துகூடுவ தில்லையென்கின்றது.)

சென்றணையி லேகதேச சந்தான் சிவமாகு
மென்று நிறை வெனி விறையடியைக் - குன்றுமற்

---

* ஞானம் - அறிவு; ஞேயம் - அறியப்படுபொருள்; ஞாதுரு - அறிஇறவன்.

† தளை சிதைய நிற்றலின் கண்டுக் குற்றிய விகாரம் அலகு பெறாது; என்னை? "சீருந் தளையுஞ் சிதையிற் சிறிய இஉ அளபோ, —ருமறிவ ரலகுபெறாமை" என்பதோத்தாகலான். கண்டுப் புளிமாவென அலகிடாது, தேமாவென அலகிடுக.

‡ ஞாயிற்றின் முற்படல மூடிய கண்ணுவமை கூறியது, ஞானசுடர்விரிந் தொளிரும் வியாபகத்தின்கட் படல மூடியகண்ணி

கூடவெனுஞ் சொல்லில்லை யாகுங் குருபரனே
நாடியுரை தன்மை நவில். (௧௦௦)

சங்கேச்சையாலே வேண்டிய திருமேனி கொள்வ னென்கின்றது.

ஓரிருபத் தஞ்சாக வுள்ள வடிவதனை
யாரியர்க ளெல்லா மறுதியிடப் - பாரதனில்
வேதியனாய் வேடனாய் மேனி பலகொண்டு
போதுவதே னெந்தாய் புகல். (௧௦௧)

(அடியார்க்காகச் சைவாசாரஞ் சற்பித்த தொழிய அவனுக்கில்லை யென்கின்றது.)

சைவ நெறியே தலைமையாய்ச் சாற்றியபின்
னையனே நீறா ரணைங்கள் - தூய்யபொடி
யென்புதலை மாலை மயிர்க்கயிறு கட்டங்க
முன்பணிந்த தென்னே மொழி. (௧௦௨)

(* அரிபிரமரை யதிட் டித்துச் சிருட்டி திதி நடத்தினாற்போல வென்கின்றது.)

ஆசாரி யபூர்த்த மாகிச் சகலர்க்கு
மீச னெழுந்தருள்வா னென்னுமறை - பேசியதென்

---

ருந்தும் பொருள்களைக் காணுமாறுபோலச் சிவப்பிரகாசத்தி லானவ மூடிய ஆன்மா சிவத்தையு மலத்தையு மறியாமைக்கும், அங்ஙனமாயினுஞ் சிவவியாபகத்தி லொன்றி யிருத்தற்கும், படல நீங்கிய கண் உடனே பொருள்களைக் காண்டல்போல ஆணவ நீங்கிய ஆன்மாவும் சிவத்தைச் சென்றணைந் தேகதேசஞ் சிவமாகாமலுங் கூடாமலு மிருந்தாங் கிருந்து பேரின்பந் துய்த்தற்கும் இயைபுடைமை பற்றியேயா மென்க

* அதிட்டான மாத்திரையானே சிருட்டியாதி தொழில்களை நடப்பிக்குமாறுபோல வீடுபேற்றை யவாவும் பக்குவான்மாவுக்கு நல்லாசிரியர் முகமாக நின்று விளக்குவிக்கும் எம்மிறை யென்றவாறும். அல்லதூஉம், திருவாதவூரடிகட்கு வெளிப்பட்டு வந்தவாறுபோலத் தன்னருளே திருமேனியாகக் கொண்டுவரு மாகலானது பற்றி யீண்டெய்து மிழுக்கில்லையெனா இறுப்பினுமாம். இங்ஙனமன்றி, மாயாவுருவினைப் பொருந்தினன்றே யிழுக்காவது அங்ஙன மெம்மிறை போது மென்ப தேமக்குடம்பாடன்றாகலா னஃதிழுக்காமாறியாண்டைய தெனினுமாம்

மாயா வொருவனவன் மாயையொரு வாகிவரி
லேயானே நாச மினி. (௧௦௩)

(கேட்டார்க்குச் சர்வசந்தேகங்களுந் தீருகையா விருந்ததென்
கின்றது.)

கேட்டா ரயக்குவமோ கேட்டபொருள் சொல்லுதற்கு
மாட்டாம லோவாக்கில் வாராதோ - நாட்டரிய
ஞான மடந்தையுட * னல்வருங் கேட்டுய்ய
மோனமுட னீயிருந்தன் முன். (௧௦௪)

( † உயிர்கட் குடலெடுத்தபின்பு பெயருண்டாதல்போ லென்
கின்றது.)

ஒன்றுபதி யொன்று பசுவென் றருண்மாயை
யொன்றென்று மொன்றுஞ் சொன்றுரைத்தா - யன்றே
னுயிரொன்று யென்கை யதுந்திரச் சொல்லா
யருளின்று மானபடி நீ (௧௦௫)

சதமணிக்கோவை முற்றும்.

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் றிருவடிவாழ்க.



* நால்வர் - ஸநகாதிகள்.

† உயிர்கள் பலவென்பது பிறப்பெய்திய பின்னரே யறிதல்
போல, உயிர் ஒன்றென்பதூஉம் பிறப்பெய்தாமைக்கு முன் என்ற
படியாம். அல்லதூஉம், சாதி யொருமையா னங்ஙனங்கூறிற்றெனினு
மாம். அன்றி, உயிர்களெல்லா மோரிலக்கணத்தவாதலான், இலக்
கண வேறுபாடில்வழி யவற்றையொன்றென்றது இழுக்கின்றென
விடுக்கினுமாம். இலக்கண வேறுபாடில்லாப் பல பொருளையு மொன்
றென வுரைத்தல் சாலுமென்பது ஆசிரியர் சிவஞான சுவாமிகள் முத
னூலி லுரைத்தருளிய வாற்றானு மறிந்து கொள்க.

சிவமயம்.

## தனியன்.

பன்னுசதமணிக்கோவைபடித்ததனுட்பொருளுணர்ந்தோர்
சொன்னசிவாகமமுழுதுந்துகளறநன்குணர்ந்தவரா
மன்னதபோதனர்சிவனையடைந்தசிவநிட்டையரென்
றுன்னுமதென்வியப்போமெய்யுறுதிமொழியாமன்றே.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுருப்யோநமஃ

# சித்தாந்த ஞானபோதம்.

## ஞானசாகரவெண்பா

நேரிசைவெண்பா.

ஆதியா யந்தமா யப்பாலைக் கப்பாலாஞ்
சோதியாய் ஞானச் சுடராகிக் - கோதிலருட்
ண்பிலெனை யாண்ட பரஞ்சோதி மாமுனிபொற்
றண்பதுமத் தாளே சரண். (௧)

பெத்தநிலை நின்று பிறந்திறந்து செல்லாமன்
முத்திநிலை கூடு முறைமையான் - மெய்த்தவர்கள்
கண்டநெறி சொல்லக் கவலையறக் கேண்மலங்கள்
விண்டகலு மாறு விரைந்து. (௨)

நன்னெறிசேர் மெய்ப்பொருளை நான்மறைக ளாகமங்கள்
சொன்னபரப் பெல்லாஞ் சுருக்கியே - முன்னுரைத்த
பன்னூலுஞ் சொல்லப் படுவதொரு பொருளை
பின்னூலிற் சொல்லக்கே ளின்று. (௩)

மன்னகா மன்றுமனை வாவிகூ புங்கழனி
யென்னதெனை நின்றவர்க ளெல்லையில - ரின்னமது
சொல்லவரு வாருந் தொலைவரிய ரென்றறிந்து
நில்லதனின் வேறாகி நீ. (௪)

பல்லுயிர்க ளெல்லாம் படைத்தளித்து நின்றவரு
மல்லலற விண்ணெடுமண் ணுண்டவருஞ் - சொல்லியிடி
லெத்தனைபேர் மேல்வருவ தெத்தனையோ ரிங்கணிலை
யத்தனையோ வென்றே யறி. (௫)

உண்டுடுத்துப் பூசிமுடித் தொண்டொடியோ டின்புநலங்
கண்டடுத்துப் பூவணைமேற் கண்வளர்ந்து - கொண்டுலவுங்
காயமெரி யூட்டவெறுங் கண்டிருந்திவ் வாழ்வுதனை
நேயமுறும் வாறெது நீ. (௬)

* எற்கும் புவியிடத்தி லிந்திரஞா லங்கனவு
நீர்க்குமிழி பேய்த்தேர் நினைப்புமறப் - பார்க்குமிது
போலநிலை யில்லாத பொய்வாழ்வை மெய்வாழ்வென்
றேலவே நின்றயா றென். (எ)

பொய்யுருடல் வாழ்வுதனைப் போற்றியத னலமுத்த
† திய்யவினை யானரகிற் சென்றடைவர் - மெய்யருடற்
றுன்பமுடி வெல்லாந் துடைத்திறைவன் சேவடிக்கீ
ழின்பமுறு வாவ லிசைந்து. (அ)

‡ ஒழிந்தபிறப் பெல்லா முடனாகி வேறாய்க்
கழிந்தவர்க ளெல்லையிலர் கண்டாய் - மொழிந்துலகிற்
றந்தைதாய் தம்பி தமையன் புதல்வனென
வந்தவா றுள்ள வழக்கு. (௯)

மனமறத் தாந்தாமுன் னெய்திவருங் கன்மபலந்
தானருந்தக் காயந் தரிக்கவே - ஞானியிடந்
தந்ததுவு முன்னிடத்திற் றங்கியது முனொடுபின்
வந்ததுவு மொன்றே மதி. (௧௦)

---

* ஈண்டுலகத்திற் றுவமிக்கப்பட்ட இந்திரஞால முதலாயின நிலையாமை மாத்திரைக்கே யெடுக்கப்பட்ட வுவமைகளாமென்பது "பரிய பூதத்து நிகழ்வனவும் பேய்த்தேரு மோரிலவே யின்று" என்புழி ஆசிரியர் சிவஞான யோகிகள் உரைத்தவாற்றானும், "கான் முகமேற்ற துளிகொள்வாய்ச் சிறக்கும்" என்றற் றொடக்கத்தன வாக ஆசிரியர் கல்லாடனார் எடுத்தோதியருளியவாற்றானு முணர்க.

† தீய-என்பது முதற்குறுகி யிடையிற் யவ்வொற்று விரிந்தது.

‡ 'ஒழிந்த பிறப்பெல்லா முடனாகிக் கழிந்தவர்க ளெல்லையிலர்' எனப் பெத்தான் மாக்கண் மேற்றாகவும், "ஒழிந்த பிறப்பெல்லாம் வேறாகிக் கழிந்தவர்க ளெல்லையிலர்" என முத்தான் மாக்கண் மேற் றாகவும் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க.

உற்றதாய் தந்தை யுடன்பிறந்தார் புத்திரர்கள்
மற்றதா ருள்ள வகுப்பனைத்துஞ் - சுற்றமா
யெல்லோருந் தாமா ரிவர்க்கார்சீ நீதகல
நில்லோர் பொருளை நினைந்து. (கக)

ஒருவயதுந் தாரா ருயிர்போகுங் கால
மருவி யருந்துணையாய் வாரா - ரருகிருந்துங்
கூடிவருந் துக்கசுகங் கொள்ளார் கொடாரிவரைக்
கூடிவரும் வாறேது கூறு. (கஉ)

எயும் பலயோனி யெண்பத்து நான்குநூ
றாயிரமும் வேற்றுருவ மாகியது - போயகன்ற
சென்மத்தி லவ்வவர்கள் செய்தசெய லாலடுத்த
கன்மத்துக் கீடாகக் காண். (கங)

ஒரு டற்குயி ரா னென்று முயிர்களையுஞ்
சாதி பலவாகச் சாற்றியதும் - பூதலத்தின்
மேய்மையாய்த் தோகி வெவ்வேறு செய்தவினைப்
பான்மையாய் வந்த பயன். (கச)

பற்றுகி யாதி பகவ ருடன்புணர்ந்த
பெற்றுளே யோரேழு பிள்ளைகளை - யுற்றுணர்ந்து
பேதமறக் காண்பளிற் பெண்ணு ணிரண்டொழியச்
சாதிபல வில்லைத் தலத்து. (கரு)

வைதிகத்திற் சொல்லும் வகைபுரைக்கின் முற்செனனத்
தெய்திவருங் கன்மத்துக் கீடாக - மெய்திகழு
மாணுகிப் பெண்ணுகி யாந்தே யிரண்டாகக்
காணும லொன்றாகக் காண். (கசு)

போதமுற நில்லாத பொய்யர்தமை யந்தகனுந்
தூதர்களுங் கூடித் துகைத்திடுவர் - மோதியுனைக்
கொல்லாம லீசனருட் கோகனகத் தாளிணைக்கீழ்
நில்லா யகலாம னீ. (கஎ)

துட்ட ருடலந் துகைத்து விடுத்துநமன்
கட்டி யடித்துக் கடுநரகில் - விட்டிடுவ

னுங்கவர்போ னீயு மருநரகில் வீழாதே
யீங்கருளை நீங்கா திரு. (௧௮)

ஈட்டுந் தவத்தா லிறைவன்றாள் பூண்டவர்பால்
வாட்டுநமன் றூதர் வருவரேற் - கேட்டிலையோ
காலனுற் கீசன் கடுங்கால னானதொரு
பாலனுற் காகப் பரிந்து. (௧௯)

துன்புறுவோர் வெங்கால தூதுவர்பின் போவர்சிறி
தன்புறுவோ ரின்புற் றருங்கணங்கள் - பின்போவர்
சாகார் சிவனடியைத் தப்பாதா ரோரிடத்தும்
போகா ருடல்கழன்று போம். (௨௰)

அப்பிலுறை யுப்பு மரனடியைச் சேருயிருஞ்
செப்பியிடி லெங்குஞ் செறிவாகு - மொப்பிலிறை
யெங்குமாய் நிற்கையினா லெய்தினரு மப்படியே
யெங்குமாய் நிற்ப ரிசைந்து. (௨௧)

என்றவுடற் கன்மமல மெத்தனையுண் டத்தனையுந்
தோன்றவிறை யூட்டிவிடுந் துன்னிருளி - னூன்றியிட
வன்னா டொங்கியவர் தாம்பெற்ற வந்நிலையின்
றென்னாகச் சொன்னா யிது. (௨௨)

உச்சாயத் தால்வருவ தொன்றில்லை யூழிலுள
துச்சாய மற்றூது மோடிவரு - மூச்சாயந்
தானே பலத்தைத் தருமென் றுழல்வோர்க்கி
யானேது சொல்வே னிதற்கு. (௨௩)

செல்லார்க்கும் பாலுலகிற் செல்வங் குறைந்துநிறைந்
தெல்லார்க்கு மொவ்வா திருப்பானேன் - வல்லார்க்குப்
போதாதோ பேராசை போக்கியரு டேக்கியதன்
மீதானந் தெய்தி விட. (௨௪)

இன்புளது தேடி யிரவுபக லீயழலத்
துன்புளது வந்து தொடர்வானேன் - முன்புளது
போகா தெடுத்தவுடல் பொன்றியிடு முன்னருள்விட்
டேகாது நில்லா யினி. (௨௫)

சாத்திரங்க ளோதித் தலைவன்டி கூடாமற்
சாத்திரங்க ளின்பாற் தருமோதான் - சாத்திரங்கள்
கற்றறிந்து விட்டாற் கதியாகா தப்பொருளிற்
சற்றிருந்து பாராய் தரித்து. (உசு)

தமைத்தெரியு மவ்வளவுஞ் சாத்திரங்க ளோதி
யமைத்தபொரு ளெல்லா மறிவார் - சமத்தனுக்கும்
வேண்டா மவத்தனுக்கும் வேண்டாமற் றுள்ளவர்க்கும்
வேண்டா மெனக்களித்த வீண். (உஎ)

உருகாத செம்பி லுறுங்குளிகை யிட்டான்
மருவா ததுபோன் மனமே - யருகிருந்தும்
பன்னுரு மெய்ஞ்ஞானம் பக்குவற்கே யல்லாது
சொன்னலிங் கென்னுருஞ் சேர்ல். (உஅ)

பாவையர்க்குப் பேதைப் பருவத்தி னற்றலைவன்
மேவியபோ தின்பம் விளையுமோ - தாவிலரு
ளோயாத தேசிகனை யுற்றுமவ பக்குவர்க்குத்
தோயாது ஞான சுகம். (உகூ)

மூன்னைவினை யுள்ளளவு மூலமலந் தானருளா
லுன்னைமறைத் தவ்வினைக ளூட்டுவிக்கும் - பின்னையருண்
மன்னிமிகுத் துன்னை மறைத்ததொழின் மூலமலந்
தன்னைமறைத் தின்பந் தரும். (ங0)

ஊனையுங் கண்மூடி யொத்தாற் றிரோதாயி
தானே யருளாகித் தன்கருணைத் - தேனே
யருந்தும்படியருளி யானந்த வீட்டிற்
பொருந்தவுடன் கொண்டு புகும். (ஙக)

தெரிவைப் பருவத்திற் சேயிழையார் நல்ல
புரிவிற் றலைவனுடன் புல்கி - யுருகியே
யின்புறுவார் பக்குவத்தி லீசனருள் சேர்ந்தவரு
மின்புறுவார் பின்பகலா ரின்று. (ஙஉ)

கருவித் தொழிலகலக் கம்பித்துக் கண்க
ளருவிசொரி யக்கருணை யாகி - யுருகியே

மெய்புளகஞ் செய்வதற்கே மையருஞான போதமருள்
செய்வனெனை யாளுஞ் சிவன். (௩௩)

மண்ணிருளை யோட்டிரவி வந்தா லுறுபயனைக்
கண்ணுடையா ரல்லார்கள் காண்பரோ - நண்ணுமலம்
வாட்டுமருட் குருவா ரினை வந்திடினு மெய்ஞ்ஞான
நாட்டமிலார் காணார் நயந்து. (௩௪)

காட்டத்தில் வன்னி கடைந்தா லொழிந்துபல
கூட்டத்திற் றோன்ற குதியாது - நாட்டத்தி
னுண்மையருந் முயலனின் றுணர்த்திறு லல்லாது
கண்மதிபிற் றோன்றுது காண். (௩௫)

வெந்தவிதை யமபுவியின் மீண்டுமுளை யாததுபோ
லெந்தைதிரு நோக்கா லெரியூட்டி - முந்தைவினை
தன்னையறுத் தேறும்வினை சாரா வகையளித்தாற்
பின்னையுள தாமோ பிறப்பு. (௩௬)

சீர்பொழியத தன்னுருவஞ் செய்யவென வேட்டுவனிப்
பார்முழுதுங் காணப் பலபுழுவி - லோர்புழுவைப்
புக்கெடுத்துக் கொள்ளுநெறி போலிறைவ னுருயிரைப்
பக்குவத்து லாளும் பரிசு. (௩௭)

மானிடருங் காண வருமோ சிவனடியென்
ஞானிடர்சோ வீணருரைப்பதென் - காணடரு
மண்ணுளோர் விண்ணுளோர் மற்றுளோர் கற்றுளோர்
கண்ணுளோர் காணார் களோ. (௩௮)

சீலமுடன் பித்துத் தெளியாத போதினிய
பாலறவுங் கைக்கும் பரிசதனைப் - போலிரதம்
வைத்திடுமே யானுலும வல்வினைக ளுள்ளளவுங்
கைத்திடுமே ஞானக் கரும்பு. (௩௯)

மோக மிகுத்தவர்க்கு மொய்குழலார் கூட்டரவுந்
தாக மிகுத்தவர்க்குத் தண்ணீரும் - வேகமறச்
சீலமிகும் பக்குவர்க்குத் தீதிலரு ளாரமுதுஞ்
சாலவினி திக்குமே தான். (௪௦)

சரியைகிரி யாயோகந் தீன்றுன்மெய்ஞ் ஞானம்
பெருகிவிடும் வாறுரைக்கிற் பேணி - யொருவன்
விரும்பிவளர்க் கின்ற வியன்மரத்தி லுண்டாம்
அரும்புமலர் காய்கனிபோ லாம். (சக)

ஒண்டொடிநல் லாளொருத்தி யுண்டென் பதுகேட்டுக்
கண்டுறுகி யின்பங் கலந்தல்போல் - பண்டைச்
சுருதிதரு ஞானச் சுகம்பெறுவா னந்தச்
சரியைகிரி யாயோகத் தால். (சஉ)

மேவுறுகி லாரம் விரையிவைமுன் கூட்டுவித்த
பூவைபுட மின்பமுறும் போதகலப் - போவதுபோன்
முந்துஞ் சரியைமுதன் மூன்றுமுயர் ஞானசுகந்
தந்தகல நிற்குந் தரம். (சங)

ஒன்றுங் குருவி யுதித்தொடுங்கு மாறுமுற
நின்றுணர்ந்து மாறு நிலைதிரிந்து - சென்றவத்தை
கூடிவரு மாறுங் குருவினரு ளாலறிந்து
தேடிப்பா ரவேறு மில். (சச)

தன்னைவந்த வின்னதெரி யென்பதுவே ரூபமா
மன்னவனை யுற்றறிதல் காட்சியாம் - பின்னையது
சுத்தநெறி யாகுந் தானறவே நீங்கிவிடிற்
றத்துவத்தின் செய்தியது தான். (சரு)

பூதங்க ளைந்தைப் பொறியைந்தை யக்கரண
பூதங்க ளைந்தொடுப் பின்புநன்ற - போதங்க
ளொன்றின் றுயிர் நீக்கி யுணர்த்தவுணர்ந் துற்றறிந்து
நின்றறிவோன் றண்டதுவே நீ. (சசு)

ஆரு மிருள்பொருந்தி லவ்விருளா மனறியருள்
சாரும் பொழுதிலரு டானுரு - மோரிவை
நீங்கித் தனித்தொருக்கா னில்லா துயிரதனை
யீங்கொருவர் காணுமா றென். (சஎ)

விண்ணிடமாய் நிற்க வெளியுமிரு ளும்பெருகி
நண்ணியிடு மாறுபோ னம்மிடத்தி - லண்ண

வருணு மிருணு மணுகியிடு மாறு
தெருளுமருள் கண்ணுகச் சென்று. (சஅ)

கண்ணிலொளி போலுங் கருதரிய விண்போலு
மெண்ணிலொளி யல்லை யிருளல்லை - நண்ணி
விடுவே றிவற்றை வெளிக்குமிரு ளுக்கு
நடுவே யுணைக்கா ணயந்து. (சகூ)

அறிவதுயி ரென்னி லதுகாட்சி யாகா
தறிவிரு ணீங்கி யருளா - லறிவினுற
மீட்சியாங் காரிருளை விட்டருளைப் பற்றுயிர்க்
காட்சியா மப்படியே காண். (ருo)

தன்னை யறியத் தனக்கறிவாய் நின்றறிவு
தன்னை யறிந்ததனிற் றானடங்கித் - தன்னறிவு
மன்னறிவே யாக வலதழிய நின்றுவிடி
லன்னிலையே சுத்தநிலை யாம். (ருக)

கண்ணின்று காணவுடன் காட்டுங் கதிரொளிபோ
லுண்ணின் றிறைவ னுயிர்க்குயிராய் - நண்ணுமுயிர்க்
கூனே யிடமா யுணர்த்திடுவ னென்றுரைத்த
றானே சிவரூபந் தான். (ருஉ)

மன்னுமொளி யாலே வளர்கதிரைக் காண்பதுபோ
லின்னருளா லுள்ளுணர்வா மீசனைக்கண் - டுன்னிடம்போ
னீடுமர னெவ்விடத்து நின்றநிலை காண்பதுவே
நாடுஞ் சிவதரிச னம். (ருங)

உள்ளும் புறம்பு மொருபொருளா மப்பொருளை
யுள்ளும் புறம்பு முறநோக்கி - யுள்ளுணர்வோ
டேகமா காம லிரண்டறவே நிற்றல்சிவ
யோகமா மென்றே யுணர். (ருச)

உணரு முணர்வு முணர்த்து முணர்வும்
புணரா வுணர்வு புலைதந்து - கணவனுட
னேகமா யன்பகலா வின்புறுத லல்லசிவ
போகமா மென்றே புகல். (ருரு)

காதலுறு மின்பங் கணவன் றருமளவும்
பேதையர்க்கு மாதா பிதாவிடத்தி - லாதரவு
சீரா னிறைவனடி சேருமள வும்புவியிற்
பேராசை போமோ பிரிந்து. (௫௬

மன்னியதா னுள்ளளவு மாதர்மே லாசைதரும
பின்னையது போகிற் பிரிந்துவிடும் - முன்னைவினை
யுள்ளளவு மண்மே லுறுபயனி லாசைதரும்
விள்ளளவி லாசை விடும். (௫௭

என்றவினை யுள்ளளவு மிந்திரியத் தால்விடையம்
தோன்று பொழுதவற்றைச் சுட்டாதே - யூன்றுவனாகக்
காட்சியாய்க் கண்டு கழன்றிருக்கி லப்பொழுதே
மீட்சியாம் வந்த வினை. (௫௮

இன்போ டடனு யினிதிருக்க வேண்டிலருண்
முன்போகப் பின்போகு முன்போல - வுன்போத
மெட்டி யொருவிடய மெய்துங்கா ன்முன்னோடிச்
சுட்டிலருள் கொண்டு துடை. (௫௯

பேறிழவுண் டாகாமுற் பேறிழவென் றேயுணரிற்
பேறிழவிற் றுன்பம் பிணியாது - பேறிழவிற்
சற்றே யிதமகிதஞ் சாருமேற் சாலவுனை
யுற்றேறு மென்றே யுணர். (௬0)

உன்னுதொழில் செய்புங்கா லுற்றபல வுாயுதங்கண்
மன்னியது செய்தகல வைத்தல்போன் - முன்னைவினைக்
கட்டருந்தும் போது கருவிகளிற் சென்றவற்றை
விட்டகல நில்லாய் விரைந்து. (௬௧)

உற்றதொரு தத்துவமு முன்வசத்தில் வாராது
சொற்றனுக்கு மற்றோர் சுதந்தரமு - மற்றே
யிருக்கையினு மெவ்விடத்து மியானெனதென் றேனுஞ்
செருக்ககல நில்லாய் தெளிந்து. (௬௨)

அத்தனரு டானே வறிவாக லானுமுயி
ரத்தனையு மீச னடிமை யெனு - மத்தானு

மின்னார் குணமுடைய ரின்னார் குணமிலரென்
றுன்னாது நில்லா யுகந்து. (௬௩)

நாட்டுஞ் செயலனைத்து நஞ்செயலா றேவினைநின்
றூட்டுஞ் சிவன்செயலே யாமோவென் - றீட்டமிக
வாட்டமுற நின்று மனந்தளர்வ தாயுயிரின்
சேட்டையறி யாதார் சிலர். (௬௪)

ஈசனரு ளின்றசையி னெவ்வுயிருந் தானசையு
மாசிலரு ளின்றி யசையாது - காசினியோ
ரென்செயலே யானே யெனதேயென் றோதலவன்
றன்செயலோ வல்லவோ தான். (௬௫)

இந்திரியக் கள்வ ரிருட்காலம் பேருறக்கம்
வந்திடுமோ வென்று வழிபார்ப்பர் - முந்தி
யமையா மலங்க ள[illegible] னேக
ணிமையா மனோக்கி யிரு. (௬௬)

நீடு திரியிருக்க நெய்சுவறி லத்திரியை
மூடுஞ் சுடரதுபோன் முத்திதரக் - கூடுமுடன்
பொன்றியிடு முன்னே புரியட் டகம்போகி
லன்றிறைவன் றன்னடிக்கீ ழாம். (௬௭)

இன்ப முறுமன்றி வினைபிரிந்த போதலறி
யின்ப முடன்கூடி யினிமையுட - னின்பமுற
வீடுஞ் சிவயோக நீங்கிலரு ளாலோதிக்
கூடுஞ் சிவன்றாள் குறித்து. (௬௮)

அன்னைதனை நீங்கி யழுதிரங்கித் தாயணுகிப்
பின்னைமுலைக் கிழுக்கும் பிள்ளைபோ - லன்னையிறை
யாசையற நீங்கி னருளாலே யோதியத
னோசையொடு மப்போ தொடுங்கு. (௬௯)

இன்பமுறு ஞான மிடைவிடா தாயின்வினைத்
துன்பமொன்றுஞ் சாருகிலா தூய்நீரி - லன்புடனோ
புள்ளினல் வாழு முறுமீன்க ளெல்லைகெடத்
துள்ளினு லென்னாகுஞ் சொல். (௭௦)

ஞானியென்னுஞ் சொல்லினுக்கு நாணுமீற் பொய்யுலக
மேனியென நின்றுழன்று விட்டாயே - மானிடரிற்
பேயாகி நின்றவனைப் பேயரெனும் பேர்ஞான
மேயாகி நில்லாய் விரைந்து. (எக)

தேங்குபர ஞானச் செழுஞ்சுடராய் நின்றோர்க
டேங்குவர்க ளின்பச் சுகமாகி - யாங்கவர்போற்
பாவித்தா லென்றுகும் பார்மீதி லுண்டவர்போற்
பாவித்தாற் போமோ பசி. (எஉ)

பேய்பிடித்த போது பிடித்ததே யாகிலென்னைப்
பேய்பிடித்த தென்றொருவர் பேசாரோ - பேய்பிடித்த
தன்மையென வென்னைப்பிறை தானுக்கிக் கொண்டதெனி
லின்மையவர் தம்பா லிறை! (எங)

தாகம் விளைத்த தலைவருட் ஞானந்த
போகம் விளையப் புணராம - லாகமெனு
மெய்திகழு மிந்திரிய வேடருடன் சேர்வரிதின்,
செய்தியறி யாதார் சிலர். (எச)

பெருகிவரு மெய்ஞ்ஞானப் பேராறு தன்னின்
மருவியது செல்லும் வசத்தே - பிரியாமற்
சென்றொழுகி லந்தச் சிவமாம் பெருங்கடலி
லொன்றுபடச் சொக்கு முவந்து. (எரு)

இந்திரியந் தாலைசிற் றின்பமுறும் போதுதுவாய்
வந்திடுவ ர்ந்தநெறி மாறுமற் - சந்ததமும்
பேரின்ப வெள்ளம் பெருகுமே யாமாகி
லாரின்ப மாகா தவர். (எசு)

வருக்கமுறுந் தாரகையின் மன்னுமொளி பார்மே
லருக்கன்வரிற் றோன்றா ததுபோ - லுருக்கரணஞ்
சேரின்ப மேதுந் தெரியுமோ மெய்ஞ்ஞானப்
பேரின்ப மேவிளைந்த பின். (எஎ)

மன்னுகலை யெல்லா மறந்துமல தத்துவங்க
டன்னை மறந்து தமைமறந்து - பின்னை

யருளே யருளா மரனடிக்கீழ் நிற்கும்
பொருளே பொருளாம் பொருள். (எஅ)

பத்தியோ கங்கூடிப் பாசங் கெடஞான
சத்தி யோகங்கூடிச் சங்கையற - முத்திநிலை
கூடுஞ்சிவ யோகங் கூடிறு லின்பசுக
நீடுமது தானாகி நில். (எகூ)

ஆசில் விகார மவிகாரங் கூடாம
லேசில் சிவானுபவ மெய்துங்கா - லாசையுற
நீங்குமே லந்த நினைவுதனை நீங்கிலரு
ளோங்குமே போமே யுணர். (அ0)

இன்னநெறி சென்று விறைவனடி சேருமெனத்
தன்னினைவி லோர்பொருளுஞ் சாராம - லுன்னைப
பரங்கேட் டிருக்கப் பரங்கேட் டிராம
லுரங்கேட் டிருக்கை யுரம். (அக)

காயத்தோ ரெல்லை கருதிக் கருத்தழிந்து
போயற்றோ ரின்பம் புணராத - மாயத்தி
ருளே கருதாம லுள்ளுணர்வோ டொன்றுமது
தானே சிவயோகந் தான். (அஉ)

கருவிகளை நீங்கிக் கழன்று லதீதம்
பெருகுமது கூடாமற் பேணி - யருள்விரவக்
கற்பித யந்தக் கருத்தே கருத்தாக
நிற்பதே ஞான நிலை. (அந)

எரியுறு நீரி லினநாரைக் கஞ்சிநடு
வாரியுறு மீன்போல வல்வினைகள் - சாராமன்
மன்னுருவ மெய்ஞ்ஞான வாரிநடு வேயுறைந்து
நின்றுருவந் தோன்றும னில். (அச)

பாசத்தை நீக்கிப் பதியிலே யாருயிரை
யோசித் ததிலே யொடுக்கவென - நேசித்
தடுக்குமே யீசனரு ளப்போ தெதிர்கொண்
டெடுக்குமே பொற்று ளிணை. (அரு)

காயும் பொறிகரணங் நாலிவற்றை யொன்றாக
நேயமுற நீங்கி நினைவொழிந்து - போயவிழ
நின்றநிலை நேராய் நிராலம்ப மாகிவிடி
லன்றுபர மானந்த மாம். (அ௬)

காயமுறு மந்தக் கரணங்கள் காலடக்கி
வாயொடுகண் மூடி மயங்காதே - நேயமுட
னெவ்வறிவு வந்துறினு மீசனறி வென்றுநினைந்
தவ்வறிவி னுள்ளே யமர். (அ௭)

உணர்வி னுணர்வென்றி யொடுங்குமா றேதென
றுணரு முணர்வி லொடுங்கி - யுணர்வு
மருவி மருவி வரினுன் னறிவை
பிரவி விரவி விடு. (அ௮)

குறைவி லறைபுனலிற் கூடிய கடாதி
நிறைய நிறைய நிறைய - மறையப்போ
மந்நிலைமை நில்லோ ரகம்புறமென் றுமலருண்
மன்னியபத னுள்ளொடுங்கு மாறு. (அ௯)

உண்ணீர் முகந்தகுட முண்ணிறைந்து பின்மறைந்து
தண்ணீரி னுள்ளிருக்குந் தன்மைபோ - லுண்ணீர்மை
யுள்ளும் புறம்பு மொருதன்மை யாமின்ப
வெள்ளம் பெருகி விடின். (௯௰)

கட்டவிழ்த்த வஞ்சக் கருவிகளிற் கூடாமல்
விட்டவத்தை தன்னிலும்போய் வீழாமற் - சுட்டுணர்வு
தோயாம லின்பசுக மாயா னந்தமய
மேயாகி நிற்பதே வீடு. (௯௧)

முன்னுமே மூன்று முதலுமுள தாயிருக்கத்
துன்னி யொருமுதலுந் தோன்றுமன் - மன்னியிடு
மாதிமலம் போலநிறை யானந்தத் தான்மறைந்து
பேதமற நிற்பதுதான் பேறு. (௯௨)

எட்டாக் கடனீந்தி யேறினவ ரேறுதார்
கிட்டாக் கடற்குட் கிடந்தலைப்பக் - கெட்டேனென்

முற்றிரங்கு மாயா லுறும்பொருள்ச ணுற்றவர்கள்
மற்றுயிர்க்கு நின்றிரங்கு மாறு. (௯௩)

மெய்யுறவோர் ஞானம் விளைந்தோர் சிவபூசை
செய்யுமதே னோ ஈனிலது செய்தாலு - மையமறத்
தன்செயலே யாகி ... றரும்பதமே முத்தியரன்
றன்செயலே யாகிலது தான். (௯௪)

மூற்றக் கடைந்தவெண்ணெய் மோரிற் கிடந்தாலும்
பற்றியதிற் கூடாப் பரிசுபோ - லுற்றுடலே
கண்ணாகி நின்றாலுங் காதலுயிர் முத்தரருட்
கண்ணாகி நிற்பர் ... மாறு. (௯௫)

... ந்தாத வாரி நடுநின்றுஞ் சேராத
செந்தா மரையிலையின் செய்திபோற் - சந்ததமுந்
தப்புறவே சுற்றமுடன் றங்கிடினு மெய்யுணர்ந்தோ
ரப்புறமாய் நிற்பா ரகன்று. (௯௬)

ஏதுடுத்தே னேதணிந்தே னேத்தொழிலிற் புக்குழன்றேன்
மாதருடன் கூடி மணந்திடலென் - போதமுற
நாடினருக் குண்டாலு நாட்டமற ஞானநெறி
கூடினருக் குண்டோ குறை. (௯௭)

உண்டுறங்கிப் பூசி யுடுத்துமுடித் துப்பூண்டு
கண்டுரைத்துக் கேட்டுக் கலவிநலங் - கொண்டுசெயல்
வேண்டாத தொன்றுமில்லை வேண்டியதொன் றில்லையெனை
யாண்டா னடிசேர்ந் தவர்க்கு. (௯௮)

உள்ளும் புறம்பு மொருபொருளாய் நின்றவர்கண்
மெள்ள விளையவுறு மெய்ஞ்ஞானக் - கள்ளருந்தித்
துங்கமுறு மின்ப சுகமே வடிவாகிக்
கங்குல்பக லென்றறியார் காண். (௯௯)

பந்தமறுத் தாண்ட பரஞ்சோதி மாமுனிவன்
றந்தபர மானந்த சாகரத்தி - லந்தமறச்
சந்ததமு மின்ப சுகந் தானு பவிந்ததனை
யெந்தநெறி சொல்வேனி யான் (௧00)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தஸ்வாமிநேநமஃ.

# சித்தாந்தஞானபோதம்.

## பஞ்சாக்கரமாலை.

### தூலபஞ்சாக்கரம்.

வாரம் பரிவுபெற வந்தித்து முப்பொழுதா
நேரம் பணிந்து நினைந்துருகி - யேரம்ப
னைஞ்சுமுகச் சிந்துரனுக் காளாறுற் சண்டனமக்
கஞ்செழுத் தஞ்சுமா னும். (௧)

நல்லேன் பிறர்நூல்கள் காழியர்கோன் பாடலலாற்
சொல்லேன் சுரரைத் தொழுநினையே - னல்லசிறுச்
செஞ்சதங்கைக் கொஞ்சுதண்டைச் சிற்றடிக்கன் பாகவெழுத்
தஞ்சுங்கை யாமலக மாம். (௨)

அஞ்செழுத்து மன்பத்தொன் றாமெழுத்துப் பேரன்றி
நெஞ்செழுத்து முட்பொருளை நீ நினைந்து - தஞ்சமென
வெங்குநிறை வானவையு மிவ்வெழுத்தா மவ்வடிவிற்
றங்குபொரு ளானமையுஞ் சாற்று. (௩)

தாபரமாம் லிங்கத்திற் சங்கையத்திற் றண்டிலத்திற்
றீபரவு குண்டத்திற் சிந்திக்க - மர்பரனு
ரங்கங்குத் தோற்றுதல்போ லஞ்செழுத்தா மப்பொருளுக்
கங்கங்க ளாமெழுத்தி தஞ்சு. (௪)

அகராதி யீரெட்டா மச்சொழிந்தை யைந்தா
முகராதி யைநான்கொன் றொன்று - ஙகராதி
சுன்மூன்று நீக்கிமச் சொல்லிமக ராதிபத்தி
னன்மூன்று லஞ்செழுத்தா நன்கு. (௫)

தொழுதிடுதல் சுத்தனெனுந் தூயோன் பொருட்டென்
றெழுமொழியா நிற்கு மியல்வாய் - வழுவுறவே
தூலமு மைந்தாகிச் சூக்கமு மைந்தாகு
மேலுரைக்கிற் றன்பெருக்கு மிக்கு. (௬)

ஓங்கும் அகார முகார மகாரமதன்
பாங்கணையும் விந்துப் பரநாத - மாங்குப்
பிரணவமாய்ப் பீடங்க ளாய்ப்பிரம ரேகை
மருவுக் ராதியுமன் வந்து. (௭)

பிரமன்கீழ் மாயனடுப் பின்னுருகன் மேலீசன்
பரமுள்ள லிங்கத்திற் பாகந் - தெரிவுறுமப்
பூசாங்கம் விந்துவுட னாதம் புணர்ந்ததிலை
பேசாய் நகராதி பெற்று. (௮)

மண்ணீ ரனலனிலம் வான்கந்த மாதிகுண
மெண்ணீரைஞ் சாமிந்தி யங்கடின - முண்ணெகிழ்ச்சி
வெம்மை நசிப்பு வெளிகுணியே தானுக
நம்முதலாய் நிற்கு நயந்து. (௯)

சேர்ந்த நிவிர்த்திபிர திட்டை திகழ்வித்தை
சாந்தியுடன் சாந்தியா தீதநிலை - சேர்ந்த
கருமந் தொலையொப்புக் காணுமளவுந்
தருமன் னகாரமுதற் றான். (௧௦)

சாக்கிரமே யாதி தருமவத்தை யைந்தினையு
நீக்கவருஞ் சுத்த நிகழ்கருவி - யாக்கியிடு
மேலா லவத்தைதவர மேவியுணர் விக்குமதல்
பாலா நகராதி பண்பு. (௧௧)

வருஞ்சத்தி யோசாதம் வாமமகோ ரந்தற்
புருடத்தோ டீசானம் போற்றக் - கருமப்
பரிவாக நோக்கிப் படைப்பாதி சத்தி
தெரிவா நகராதி சேர்ந்து. (௧௨)

கன்மசா தாக்கியத்திற் கர்த்திருசா தாக்கியத்தின்
றன்மைதரு மூர்த்தியமூர்த் தங்களேன் - நன்மையுருச்

செய்தசா தாக்கியத்திற் சேர்சிவசா தாக்கியத்தி
லெய்துநக ராதிகடா னென். (கங)

பன்னுமியோ மாத்திரமும் பாசு பதாத்திரமு
முன்னுவகோ ரத்திரமு மொண்சுரிகை - யென்னவரு
மத்திரமு மன்னுசிவ வத்திரமு நம்முதலாய்ச்
சத்தியமா திக்குள்ளார் தான். (கச)

சேர்த்த விதயஞ் சிரசு சிகைகவசு
நேத்திரமென் றைந்தாகி நின்மலமே - யார்த்துளதா
மங்கங்க ளைந்தா யணுவாகிப் போகமவை
தங்குநக ராதிகளாற் றான். (கரு)

வாக்கவையாம் வைகரிமுன் மத்திமை பைசந்தி
சூக்குமைமா மாயையிவை தோன்றியே - யாக்கமுட
னித்தமாய் வாக்கைந்து நிற்குநக ராதிகடான்
வைத்ததா மென்றுணர்வாய் மற்று. (கசு)

சத்திகடான் சத்தியத்தி லெட்டுத் தசமூன்று
மத்தகைவா மத்திலகோ ரத்திருநான் - கொத்தநான்
கீப்புருடத் தைந்தீசத் தாமுப்பத் தெண்கலையி
னொப்பிலநக ராதி யுறும். (கஎ)

படைத்து மவையளித்தும் பண்ணியவை யெல்லாந
துடைத்து மறைத்துந் துயர்நீன் - றெடுத்து
மொழியாத வைந்தொழிலு முய்த்திடு நவ்வாதி
மொழியான வஞ்செழுத்து முன். (கஅ)

பிராணாதி காலைந்தும் பேதித்து நிற்கக்
கிராணாதியைந்தினையுங் கிட்டித் - திராணமெனுங்
கந்தாதியைந்தினையு நகராதி கால்கொள்ளு
முய்ந்தே நகராதி யுற்று. (க௯)

வித்தை கலையோ டிராக மிருசுத்த
வித்தைமுதன் மூன்றியற்ற விந்துமூத - லுய்த்திடும்பொய்
மாயை நியதியைப்பின் மன்னுதுடி மானையிவற்
றேயுநக ராதிகடா னீங்கு. (உ0)

தானில்லை முன்னைத் தமிழில்லை மன்னுமிறை
யோனில்லைச் சத்தியெனு மொனறில்லை - மானில்லை
யென்றமுத லைந்தி னிழப்பதுவே யெத்தமென
நின்றநக ராதிகடா னேர்ந்து. (உ௫)

சூக்குமபஞ்சாக்கரம்.

தூலமிரு சூக்குமங்கேள் தூலம் பதினைந்தின்
பாலுளவாய் நின்ற பயனறிந்து - மேலுணர்வி
னின்றசிவன் முன்னாக நீடுவாய் நின்றுநம
என்றவைக ளிட்டே யிரு. (உ௬)

ஆனந்த மாடவெளி யம்பலத்தி லானந்தி
தானந்த மாமறைப்பின் றன்முதல்கெட் - டானந்த
மாறுதமே லீ டனவரதத் தாண்டவமாய்க்
கூறுத வஞ்செழுத்துங் கூறு. (உ௭)

பறைதுடிவா ளிச்சை பரிந்தளித்து வீசும்
வரதனா னந்தபயம் வன்னி - கிரியை
மலமழித்து நல்கும் மலரடியில் வைத்து
முலைவி னுபாங்கமென வோது. (உ௮)

தற்பதத்திற் சியொடுவாத் தாமிரண்டு நீயென்னுஞ்
சொற்பதத்தில் யவ்வுந் துரிசற்று - முற்பதநீ
யாகின்று யென்றபடித் தற்றநம வும்பெற்
றேயுந்தான் சத்திமுன் றென். (உ௯)

ஒத்த வுபதேச நல்யோக மேவரதம்
வைத்தவப யம்பரிசம் வன்னியினுற் - சுத்திசெயுங்
கன்மமிருட் கேட்டிற் கமலபதஞ் சூட்டுமிந்நன்
றன்மை பவுத்திரியே தான். (உ௰)

கண்டிவினி தாமுலகு காணறசோ றுய்ச்சிவமாய்க்
கண்டு பிறிதொருகாற் காணுமற் - கொண்டிடுமுன்
னுதியருள் கீழிட் டருள்சிவமே லாகநடுப்
போதநிலை நின்றிடுமெய் பூண்டு. (உ௧)

சுகப்பே றொழித்தல் சுகவொழிவிற் றோன்றல்
சுகத்தோற்ற மற்ற சொரூப - மிகுத்தநிலை

யாக்கந் திதியழித்த லாதி மறைப்பொருளாற்
காக்குந் தொழிலைந்துங் காண். (உ௮)

தற்போக்குப் போக்கொருகாற் றுவாமற் றற்பரமாய்
நிற்போர்தம் போன நிறையுடைமை - முற்போக்
குதய மிவைமுறைத்தே யூட்டுதன் மேலும்
புதுமைசெய லைந்தின் பொருள். (உ௯)

இன்ப மதில்விளக்க மின்பமதா கின்மைபெறு
மின்பமறைப் பின்பழி வீடுவைக்க - வின்பான்
வேரெழுத்தி லைஞ்செழுத்து மொன்றாக நிற்குமொரு
பேரெழுத்திற் பெற்றிடுமப் பேறு. (௩0)

நின்ற நிலையே நிலையாய் நகாரமுத
னின்றுமறைப் பற்றுமல நீங்குதலா - னொன்றுசிவந்
தானு நிலையற் றதுதானற் றப்பொருளே
தானுத லாற்றநிலை தான். (௩௧)

நமவமுக் கியச்சிவமாய் நாப்பணி னின்றகல
வமல மலத்தைக்கை டாக்க - வமையளிக்கு
முன்னையவண் முன்னைமறைப் பானவளை நீக்கவினை
யுன்னல நிற்பதுதா னொன்று. (௩௨)

குன்று முதலெழுத்துக் கூட்டெழுத்துக் கூடியுட
னொன்றுபு மொன்றுகா வொற்றெழுத்து - நின்றுந்
தெரியா விலக்கெழுத்துத் தீர்ச்சிதக தாயும்
பிரியா வெழுத்தென்றே பேசு. (௩௩)

மெய்யெழுத்திற் றன்வர்க்க மெய்யெழுத்தா லொன்றுகா
வுய்யவிரண் டாகா வுயிரெழுத்துப் - பொய்யைமறைத்
தீரு மெழுத்துடனே யெய்வமக ரக்குறுக்கம்
பேறுலே யின்பம் பெறு. (௩௪)

ஓரெழுத்தாய் நாலெழுத்து ளொன்றவிரண் டிற்றுயாப்
பேரெழுத்தாய் நின்று பெருகின்பம் - பாரிறுதி
நாதாதி புள்ளடக்கி நள்ளொடுகீழ் மேலிட்டு
வேதாதி யந்தமாம் வேறு. (௩ரு)

நியநதமுத லைந்தெழுத்தில் நீர்கொண்டு குமப்
தியானகரத் தான்மேற் றெளி. (௪௩)

மாற்சன மாகந கார மறைப்பற்று
மேற்சன்னந் தீரிருளை வீட்டியதன் - பாற்செ
லகமருட ணஞ்செய் தருண்மண் டலத்திற்
றருசிவற் கஞ்சலிசெய் தாழ்ந்து. (௪௪)

ஆசி லருள்வடிவே யாசைகளே கரணம்
பூசைதனக் கஞ்செழுத்தாற் போற்றிசெய்து - பேசாப்
பிரணவஞ்சே ரஞ்செழுத்தாற் பின்பர்க்கி யஞ்செய்
தரனருளே யாய்த்தெளிப்பா யங்கு. (௪௫)

அவமுத ஞதாந்த மஞ்செழுத்தா னின்ற
சுவடு துவாரமதாத் தோன்று - மவ்வதெரிசித்
தெங்கும் பரையாந் துவாரத்தி லெய்திடுவா
யங்குநம விக்கினங் கள். (௪௬)

முத்தி நிலையளிக்கு முற்பரையாம் வாயிலிடை
யத்திரமா யிச்சாஞா னக்கிரியா - சத்திகளை
யேத்திநம வாத்துப் பிரமற் கெட்டாத
வாத்துபதி யைப்பணிந்து வாழ். (௪௭)

சித்தாந்த மோரிருபத் தெட்டுஞ் சிகாரமுதல்
வைத்தாரை யஞ்செழுத்தால் வந்தித்துச் - சுத்தமா
மஞ்சா மெழுத்தால் நிவர்த்திகலை யாதியழித்
தெஞ்சா நடம்போ யிறைஞ்சு. (௪௮)

தூயவெழுத் தாலீடுந் தூக்கியதாள் நோக்கியதே
யாயநிலை யந்தரியா கஞ்செய்தே - மேயவெழுத்
தஞ்சால் விசேடார்க் கியஞ்செய் திரவியங்க
ளஞ்சாலே சுத்திசெய்வா யாங்கு. (௪௯)

ஆனந்த மூலத்தே யன்பெழுத் தேவற்புரிய
வானந்தி பூசைசெய வவ்விரண்டுந் - தானந்த
மாகவதி லோவா வர்ச்சனையா லான்மாவுக்
காகவஞ் சுத்திசெய்யா யாங்கு. (௫௦)

மூன்றைந்து தூலத்தின் மூன்றைந்து சூக்குமத்தின்
மேவுஞ் செழுத்தின் விதிப்படியே - நாவொன்றச்
சொல்லாத வஞ்செழுத்தின் சுத்தியென வைந்துமற
நில்லா நிலையாகி நில். (௫௧

ஒன்றுமிலா னிச்சை யுருவாக்கி யைந்தொழிலி
னின்றநிலை மாலியத்தை நீக்கியவ - னென்றும்
பரையா லனுபவத்தைப் பண்ணுநமப் பாழா

(௫௨

அங்கரு செழுத்தாலு மானரு சமுதஞ்சு
தங்குருவழி யாமஞ் சனஞ்செய்து - தங்கியிடுந்
தன்வா தனைமாற வொற்றுடை சாத்தியவா
வெய்யமாகி லாசனத்து மேலுறு. (௫௩)

ஆதார சத்திமுத லாதாந்த வஞ்செழுத்தின்
மீதான வாதனத்தின் வெவ்வேறு - சோதனையிற்
றன்னுணர்வாற் கண்டேயுந் தானுணர்ந்த ஞானத்தை
யுன்னுமதே யர்த்தமதா யோது. (௫௪)

முன்னெழுத்தா மானந்த மூலத்தை யாவாகித்
துன்றுநிலை தன்னொக்க மொன்றுபட - வென்னவருந்
தாபனமே யாதிசெய்து தானந்த மாதிமல
ராபரண மாதிகளா யாக்கு. (௫௫)

தன்னறிவே நைவேத்யம தன்னறிவே பானீயம
தன்னறிவே தாம்பூலந் தானாக - முன்னருளே
யாய்த்த முகவாச மணிசிவமாய்த் தூபாதி
நிர்த்தநம வென்றுணர்வாற் செய். (௫௬)

நிராஞ் சனமெய்ந் நிறைவு பரைநீறு
பாராக்கண் ணுடியுயிர் பற்றுகுடை - * சேராமை
யோச்சு கவரி யுடனுலை வட்டமுதல்
வாய்ச்சமலக் கேடாக வை. (௫௭)

---

* நிராபயம் அல்லது மறைப்பு.

ராத்திய நீர்தானுய்ப் பரையா சனமா
மூர்த்திசிவ மார்க்கியமா முன்னைநம் - நீத்திறைஞ்சி
யெண்ணிறிரு வஞ்செழுத்தை யெண்ணியிறைக் கீந்துவலம்
பண்ணருளில் வீழ்ந்து பணி. (ருஅ)

குண்டலியாங் குண்டத்திற் கூடுபரை யக்கினியி
லண்டனுக்குத் தன்னழிவே யாகுதியாத் - தொண்டுசெய்து
சென்றளித்துத் தற்சுத்தி செய்தல் பவித்திரந்தா
னென்றிறைஞ்சா யட்டமல றிட்டு. (ருகூ)

அஞ்செழுத்தா லட்டமல றிட்டிறைஞ்சிப் பூரணமா
மஞ்செழுத்தான் மூர்த்திசெய்தே யாதரித்து - நெஞ்சழுத்தி
ஞானகுருத் தாளிணையி னுண்மலரிட் டர்ச்சித்தால்
ஞானநெறி யர்ச்சனையா நன்கு. (சுo)

காழிநகர் வாழி கவுணியர்கோன் றாள்வாழி
வாழியருட் கண்ணுடைய வள்ளல்தா - ளேழிசையின்
றெய்வத் தமிழ்ப்பாடல் வாழி திருநெறியாஞ்
சைவத் தவர்வாழி தான். (சுக)

## பஞ்சாக்கரமாலை

### முற்றிற்று.

மெய்கண்டதேசிகன் றிருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---



சிவமயம்.

# ஸ்ரீபஞ்சாக்ஷரமகிமை.

சிவ என்னும் அக்ஷரத்வய பதத்தால் ஸ்ரீ பஞ்சாக்ஷரம் பிரகாசிக்கின்றது. ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தால் ஸ்ரீ ருத்ரம் பிரகாசிக்கின்றது. ஸ்ரீ ருத்ரத்தால் நாலாவது காண்டம் பிரகாசிக்கின்றது. நாலாவது காண்டத்தால் ஏழுகாண்டங்களடங்கிய எஜுர்வேதம் பிரகாசிக்கின்றது. எஜுர்வேதத்தால் இருக்கு - சாமம் என்னு மிரண்டு வேதங்களும் பிரகாசிக்கின்றன. வேதங்கள் மூன்றே. திரயீ என்று அதனை அமரஸிம்ஹம் கூறுவதனாலறிக. அதர்வணம் அம்மூன்றி லடக்கம். இனி வேதங்கள் மூன்றில் எஜுர்வேதம் நடுவிலிருக்கின்றது. எஜுர்வேதத்தினடுவில் நாலாவது காண்டமிருக்கின்றது. நாலாவது காண்டமாகிய நடுக்கண்டத்தினடுவில் ஸ்ரீருத்ரமிருக்கின்றது. ஸ்ரீருத்ரத்தினடுவில் ஸ்ரீபஞ்சாக்ஷரமிருக்கின்றது. ஸ்ரீபஞ்சாக்ஷரத்தினடுவில் சிவ என்னும் அக்ஷரத்வய பதமிருக்கின்றது. இதனால், வேததினது ஹ்ருதய மந்திரமாகச் சிறந்த சிவஸ்மரணையின் மிக்கது ஆத்மாக்களுக்கு வேறொன்றுமில்லை யென்பது சித்தாந்தமாயிற்று. சுபம்.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்

# இந்நூலின் வரலாறு.

சிற்றம்பலநாடிகள் என்னுமொரு சிவாநுபூதிமான் சில வருடங்
களுக்குமுன்னர்ச் சீகாழியிலிருந்தனர். இவர் மெய்கண்ட சந்ததியில்
வந்தவர். இவரது திருவடியை யாச்சிரயித்துப் பேறெய்தினோர் பலர்.
இவருள் ஒரு திருக்கூட்டமாய்ச்சேர்ந்து ஆசாரிய பக்திசெய்தவர்கள்
அறுபத்து மூன்றுபேர். அவர்கள் தத்துவப்பிரகாசர்-கண்ணப்பர் முத
லினோர். இவ்வடியார்கள்சூழ ஆசாரியசுவாமிகள் மாயூரத்துக்கருகில்
ஒரு மடாலயத்தி லெழுந்தருளிச் சிவபூசை-குருபூசைகளை நடத்திக்
கொண்டிருந்தனர். இப்படி யிருக்குநாளையில், ஒருநாள் அடியார்க
ளும்,சுவாமிகளும் வழக்கம்போல் திருவமுதுகொண்டனர். அப்போது
பரிசாரகன் வேப்பெண்ணெயை நெய்யென்று தெரியாமலெடுத்து
விட்டுவிட்டான். சுவாமிகள் முதலினோர் ஒரு விகற்பமுங் கொள்ளா
மல் அதை நெய்யென்றே விரும்பி யுண்டார்கள். அவர்களிலொருவர்
"கண்ணப்பசுவாமிகள்" கொஞ்சம் விகற்பித்துப் பரிமாறியது வேப்
பெண்ணெயென்றறிந்து, எண்ணெவிட்டுப்பிசைந்த பருப்பன்னத்தை
யுண்ணமாட்டாமல் "வே" என்று ஒக்காளித்தனர். அதனை யறிந்த
சுவாமிகள் "நமது திருக்கூட்டத்தில் அபக்குவியிருப்பது தகுதிய
ன்று" எனக் கட்டளையிட்டனர். அதனைக் கேட்ட கண்ணப்பர்
டனே பந்தியினின்று நீங்கித் தமது குறைவை யெண்ணி வருந்தி
ஆசா.. ரியரை வணங்கிக்கொண்டு வடதிசை நோக்கிச் சென்றனர்.
இவர்பே ான சில காலத்தின் பின்னர் ஆசாரிய மூர்த்திகள் தமது அடி
யார் களோடு சித்திரைமாதம் திருவோணநட்சத்திரங் கூடிய சுபதின
த்தி ் சமாதியிலிறங்குவதாக அரசனுக்குத் தெரிவித்து, அதற்குத் தக்க
வா (யாவரும் ஏககாலத்திலிறங்குவதற்கு) இடம் சித்தம்பண்ணும்
ப டிக் கட்டளையிட்டனர். அரசன் பேராச்சரியமும் பெருமகிழ்ச்சியு
மடைந்து மாயூரத்துக்கு அடுத்த வொருபெரிய வனத்தில் சுவாமிகள்
கட்டளையின்படி அவருக் கொருசமாதியும், அவரது அடியார்கள் அறு
பத்திரண்டு பேருக்கும் அறுபத்திரண்டு சமாதிகளும் சமைத்து விண்
ணப்பித்து, இவ்வரிய விஷயத்தை உலகமெங்கும் அறியும்படிப் பறை
சாற்றுவித்தான்.

இவ்வதிசயத்தைக் கேட்ட யாவரும் குறித்ததினத்தில் அந்த வனத்தில் வந்துசேர்ந்து யாது நடக்கப்போகிறது பார்ப்போமென்று திர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அரசன் வனத்தை யலங்கரித்துச் ர்வமங்கலங்களுந் தழைக்கச்செய்து அடியார்களது மகிமையைச் சிந் ித்துக்கொண்டு சுவாமிகளது திருவடியை வணங்கினான். சிவகிருபை நெருங்கியதால் அடியார்களோடு சுவாமிகள் அவ்வனத்திற் புகுந் ாவர்களையுங் கடைக்கணித்து ஆசீர்வாதம் புரிந்து யாவருங்கேட்கும் படி மூன்று திருவெண்பாக்கள் கூறிச் சிவத்தியானத்துடன் அங்க மைத்துள்ள சமாதியொன்றிலிறங்கி மௌனமுத்திரை தாங்கினர். டடனே அவரது அடியார்கள் ஒருவர்பின் னொருவராகத் தனித்தனி வந்து ஒவ்வொரு வெண்பாக் கூறி ஆசாரியரைப் பிரதக்ஷிணஞ் செய்து, ஒவ்வொரு சமாதியிலிறங்கிச் சித்திபெற்றனர். இவ்வாறு நடக் தமதிசயத்தை அரசனும், பிறருங்கண்டு இந்தப் பாக்யம் இவரினத்திற்சேர்ந்த ஒரு அடியவருக்கு இல்லாமற் போயிற்றன்றோ? அவரிப்போது எங்கிருக்கின்றனரோ? அவருக்கு இது தெரியுமோ தெரியாதோ? என்று பலவாறு பேசிக்கொண்டு வருந்தி நின்றார்கள். அப்போது அந்த அடியவர் திடீரென்று அங்குத்தோன்றித் தமக்கொரு சமாதிக்கட்டடம் வேறேயொன்று தனியே காணப்படாமையால் அங்கமைந்துள்ள சமாதிகளை யெல்லாம் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்துக்கொண்டு தமது முதல்வரது சமாதியின் முன்னின்று ஆராவன்புடன் "ஆண்டகுரு சிற்றம் பலவா வடியேற்கா-மீண்டும் பிறக்க நீ வேண்டாவோ" என்று கூறினர். உடனே அந்தச் சமாதியில் பிளவுண்டாகி ஆசாரியசுவாமிகள் விழித்துப்பார்த்து, எதிரே அஞ்சலியோடு நின்ற அன்பரை இருகரங்களாரத் தழுவியெடுத்துத் தமது மடியின் மீதிருத்தி ஐக்யஞ்செய்துகொண்டனர். இவரது பாக்கியமே பாக்யம்! இது யாவர்பாக்யத்தினும் மேலாய்விட்டது என்று தரிசனார்த்தமாக வந்த யாவர்களும் இன்பமெய்தித் தத்தமிடஞ் சென்றனர். அரசன் அந்தச் சமாதிக் கட்டடங்களை மேலேமூடிப் பூர்த்தி செய்து, அங்கு நித்யபூசை நடந்துவரும்படி ஏற்பாடு செய்து, சிவாநுக்ரகமெய்தியின்புற்றான். இதனுண்மையை அபியுக்த ரொருவர் பின் வெண்பாவாற் றுதித்தனர்.

தனியன்.

முத்தரறுபத்து மூவர் பணிந்தேத்துஞ்
சித்தர்வனந் தில்லைச்சிற் றம்பலவா - பத்தர்
பவவிருளை நீக்கியருள் பாநுவே தூய்ய
தவவடிவே நின்றாள் சரண்.

சிற்றம்பலநாடிகளும், அவரது மாணாக்கர்களும் சித்தர்களாகையால், அவர்கள் சித்தியடைந்த வனத்துக்குச் சித்தர்வனம் அல்லது சித்தர்காடு என்று பெயர் வழங்குகிறது. இந்த ஸத்கிரந்தம் ஸாதுக்களது க்ஷேமார்த்தம் உலகில் நீடுவாழ்க.

இவ்வெண்பாநூலன்றி, சிற்றம்பல நாடிகள் கலித்துறை-சிற்றம்பல நாடிகள் முறுவல்-தாலாட்டு-இறந்தகால நிகழ்கால வருங்கால இரங்கல் முதலிய பிரபந்தங்களும் இவ்வாசிரியர் மீது இவரது அடியார்கள் பாடியிருக்கின்றனர். இவர் செய்த நூல்கள் துகளறுபோதம்-அறிவானந்தசித்தியார் - திருச்செந்தூரகவல் - சித்தாந்த சைவக்கட்டளை முதலியனவாம். இவர் சீகாழியில் தொண்டைமண்டல வேளாண்மரபிலுதித்தவர். இவரது பரம்பரையார் காஞ்சீபுரத்து ஞானப்பிரகாச சுவாமிகளது ஆதீனத்தாரென்றறியத்தக்கது. சிற்றம்பலநாடிகள் இவ்வொருவரேயன்றிப் பெரியபழுதைகட்டி சிற்றம்பலநாடிகள்-சின்னபழுதைகட்டி சிற்றம்பலாாடிகள் என்னும் வேறிரண்டு மகாத்மாக்களிருந்திருக்கிறார்கள். சிற்றம்பலநாடிகள் என்னும் பெயரால் மூவர் பிரசித்தியடைந்திருக்கிறார்களென்பது இதனாலறியக்கிடக்கின்றது. இம்மகானுக்களை வழிபட்டு உலகம் இன்புறக்கடவது. சுபம்! சுபம்!!

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுருப்யோநம:.

# சித்தாந்தஞானபோதம்.

## சிற்றம்பலநாடிவெண்பா.



### குருமூர்த்திகள்.

உற்றுணர்வுக் குள்ளே யொழியா வுணர்வுணர்த்தப்
பெற்றுயே யெவ்வுயிர்க்கும் பேறதனை - மற்றதுதான்
காண்டதே பாய்ப்பளவின் மாறு நிறைவுநம்மைப்
பூண்டதே யென்றே புகல். (௧)

கங்களார மின்பத் தடங்கடலின் மூழ்குவித்தே
மங்குலகந் தீர மறப்பித்தோ - மிங்குலகில்
வாராதே வாதனையால் வந்திரே யாமாகிற்
பாராதே பாரீர் பரம். (௨)

மன்றுமழ பாடிமுதல் வாய்த்தவருள் மைந்தர்க்
கின்னமொரு போத மியம்புகேன் - முன்னுலகைப்
பம்மறியாப் பார்க்கிற் பரையாகு மப்பரையைப்
பம்மறியாப் பார்க்கிற் பரம். (௩)

### தத்துவப்பிரகாசர்முதலினோர்.

என்னை வினையறியா யானு மதுவறியேன்
முன்னைவினை கூடன் மொழிந்தருளா - யென்னத்
திருவார்பொழிற்காழிச் சிற்றம் பலவன்
றருவாறு நானென்றான் றான். (௪)

கண்ணுக்குக் கண்காட்டா காட்டுங் கதிரொளிகள்
பெண்ணுக்குப் பெண்விளையாப் பேரின்ப - மெண்ணெக்கச்
சொல்லா ருயிர்க்குயிராய்த் தோய்ந்துணர்த்தி யின்பருத்த
வல்லான்சிற் றம்பலவன் வந்து. (௫)

சென்றறிய வேண்டாவே சேராமை வேண்டாவே
யொன்றுபட வேண்டாவே யுள்ளதே - நின்றநிலை
கண்டாயே யெங்குங் கதிரொளிகண் காயமெலா
முண்டான தன்மைபோ லுற்று. (௬)

பக்கமொடு கீழ்மேலு மில்லாப் பராபரத்தி
லொக்கநிறுத்தியதை யொன்றாக்கி - மிக்க
சிவபோக நல்கினான் சிற்றம் பலவ
னவபோகஞ் செல்லா தழித்து. (௭)

கருவி கரணமுடன் கைகலந்து கண்டு
மருவு விடயமெல்லாம் வாங்கி - யருகாமற்
சீவிப்பாய் நீயென்றான் சிற்றம் பலநாடி
பாவித்தே பாராமற் பார்த்து. (௮)

கருவி கரணங்கள் கண்டுணர மாட்டா
மருவியது வான்மாவும் வாரா - குருபரன்றான்
சிற்றம் பலநாடி தென்கா ழியர்பெருமா
னுற்றுணர்த்தப் போதென் னுணர். (௯)

அட்ட வராகமுட னஞ்சுவச ரூதிசரு
மொட்டு முயிர்ச்செயல்க ளோரெட்டும் - விட்டகலச்
சிந்தா மணியான சிற்றம் பலநாடி
தந்தான்பொற் செங்கமலத் தாள். (௧௦)

வாக்காதி நான்கும் வருணங்க ளைம்பானும்
போக்காமுன் போடணையும் போனவே - நோக்கி
வணங்கரிய சிற்றம் பலநாடி தாளை
வணங்கி நினைந் தெப்பொழுதும் வாழ்த்து. (௧௧)

ஆசயங்க ளைந்துமுன் றாறும் வியாதிகளும்
தேசு மலமைந்துஞ் செய்கோச - மோசைதரு
தாதுக்க ளேழுந் தணத்தான்சிற் றம்பலவன்
மேதக்க காழிநகர் வேந்து. (௧௨)

மண்டலங்கண் மூன்று மருவுமா றாதாரங்
கொண்டு திரியுடம்பின் கூறிரண்டும் - விண்டகலச்

சிந்தா மணியான சிற்றம் பலநாடி
தந்தான்பொற் செங்கமலத் தாள். (௧௩)

கரையிறந்த பேரறிவுங் கண்டதுவு நீங்கி
யுரையிறந்த வானந்த முண்டு - திரையிறந்த
வாரிதிபோ லில்லென்று வைத்தான்சிற் றம்பலவ
ஞருதவு வாரிவன்போ லாங்கு. (௧௪)

என்னை மறைத்தவிரு ளெங்கேனும் போனதோ
நின்னருளிற் கெட்டதோ நின்றதோ - முன்னைத்
தவகுருவே சிற்றம் பலவனே சண்மைச்
சிவகுருவே நாயேற்குச் செப்பு. (௧௫)

அல்லார் பொழிற்காழி யம்பலவன் றன்வார்த்தை
யெல்லாஞ் சிவமா யிருந்ததே - தொல்லாழி
வெள்ளம் பரந்திற்றல் வேறுபுன லொன்றுபோ
லுள்ளஞ் சிவத்தோ டொழிந்து. (௧௬)

குலாலன் றிகிரி சுழல்வண்டு கொள்ளி
புலாவு மறங்குவரி யொத்தே - மலாதியா
லாரா வடியே னுலகி லலமருகை
பாராய் * திருவேகம் பா. (௧௭)

மாதாவென் மாயை யரித்தாண் மரித்தவுடன்
பேதமிலாப் போதன் பிறந்தானே - யாதலா
லாருசக் தாணிமன்னடி லானேன்சிற் றம்பலவா
பூசைசெய்வ தெங்ஙன் புகல். (௧௮)

வேலையலை போலெனக்கு மேதினியில் வாதனைநோய்
மேலை யலையறிந்து விட்டதே - வேலைபோ
னித்திய மோனாநந்தத் தில்லென்றான் காழிநக
ரத்தன்சிற் றம்பலவ னிங்கு. (௧௯)

பாசமுநீங் காமற் பதியிற் கலவாம
லாசறுநன் முத்தியெனக் காக்கினான் - தேசிகர்கோன்

---

* காஞ்சிக்ஷேத்திரம் சிற்றம்பல நாடிகளது நிவாசஸ்தானம். அவரது பரம்பரையார் காஞ்சியி லிப்போது மிருக்கிறார்கள். அதனால் திருவேகம்பராக அவரை வாழ்த்தியபடியாம்.

செந்நெல் வயற்காழிச் சிற்றம் பலநாடி
தன்னருளுக் குண்டோ தரம். (உ௦)

நேய மலரவராய்க் காணுங் கருத்தொழிந்து
காயமொழிந் தான்மாவைக் கண்டேனே - நாயேனே
தென்புகலித் தேசிகனே சிற்றம் பலவனே
யென்புகல்வே னென்செய்வே னியான். (உக)

காயமொழிந் தான்மாவைக் கண்ட முறைபோலத்
தூயவரு டோன்றியுயிர் தோன்றும - லேயுதற்குத்
தந்தருள்வான் சிற்றம் பலநாடி சண்பையர்கோன்
வந்தருளப் போனவா மாண்டு. (உஉ)

உற்றவுயிர் தோன்றும லுள்ளுணர்வு தோன்றுவபோற்
பெற்றவரு டோன்றுமற பேரின்ப - முற்றுமிகக்
காட்டினான் சிற்றம பலநாடி சாரியர்கோன்
வாட்டினான் வாதியா மம். (உங)

நானு விதத்தானு நானினைந்து பார்ப்பளவி
னுனு வறிவிற னல்லாது - வானுடு
தென்புகலிச் சிற்றம பலநாடி சேர்த்களித்த
வின்பருத வாரா தெமக்கு. (உச)

சிற்றம் பலநாடி சேர்பாத வல்லபங்கள்
சொற்றிகழும் பைங்கிளியே சொல்லக்கே - ளுற்றெறவரும
காணுது காட்டியது காணுது காட்டியது
காணுது காட்டியது காண். (உரு)

செங்கமலத் தாள்வணங்குஞ் சிற்றம் பலநாடி
யங்கமலக் கையுரைத்த தாச்சரியம் - பைங்கிளியே
யாருயிரைக் காட்டியதி லாருயிரைக் காட்டியதி
லாருயிரைக் காட்டியதே யாங்கு. (உசா)

ஆணவம்போ மாயைபோ மான விருவினைபோ
நாணவரு மாமாயை நண்ணும்போம - வேணுபுரத்
தேசிகர்கோன் சிற்றம் பலநாடி சேவடியைப
பூசைசெய்ய யாம்பூண்ட போது. (உஎ

டறியாமை மாற்றுசிற் றமபலவன் வைத்த
நெறியே நிலையாக நில். (௩ரு)

என்பிறவித் துன்பகற்ற வென்றேசிற் றம்பலவா
நன்பிறவி யென்போல நண்ணினு - மின்புறவே
பொய்யாத நால்வருக்குப் போதித்த மோனவுரைக்
கையா கருணு கரா. (௩சா)

விகற்பமிலா ஞானம விமலனூர் ஞானம
விகற்பமெலா மிக்கசடங் கீனும - விகற்பமெலா
மென்னுமே யென்று னெறிலார்சிற் றம்பலவ
னுன்றேலே யென்றுரைத்தே னுற்று. (௩எ)

போக்குவர வில்லைப் புனிதர்க்கு மாயைக்கும
போக்குவர வாருயிர்க்கோ போற்றென்றேன் - போக்குவர
வங்கங்கே யென்று னருளார்சிற் றம்பலவ
னிங்கிங்கே யென்றுரைத்தே னியான். (௩அ)

இன்றகன்று நின்றீ ரினிக்கூ டவாரீரே
யன்றகலா மும்மலங்க ளல்லவோ - வன்றுபவந்
தீர்த்தருளுஞ் சிற்றம் பலநாடி காழியர்கோன்
பார்த்தருளக் கண்டுய்யப் பண்டு. (௩கூ)

யானெனத் நீக்கி யிறைநிறைவி லொனருக்கி
யானெனது நீங்கா திருத்தினுன் - யானெனதிற்
றங்கா தவர்போற் றுரு சண்ணைச்சிற் றம்பலவன்
மங்காமற் காத்தாண்ட வாறு. (சாு)

உன்னுவது முன்னுலே யுன்னு தொழிந்துநிலை
மன்னுவது முன்னாலே மற்றில்லை - யென்னுமது
நானறியேன் சிற்றம் பலநாடி நானெனநீ
தானறிவை யாரறிவார் தான். (சக)

இறந்துபிறந் தெய்த்த விளைப்பொழிக்க வென்றோ
பிறந்துலகில் வந்தாய் பிரானே - யறந்திகழும்
போதா புராதனு பூரணு பூம்புகலி
நாதா சிற்றமபலவா நான். (சஉ)

மைந்தா வெனவழைத்து மாயா வுடலகற்றப்
பிந்தா வழிவென் றிசைவித்தா - யெந்தாயே
யாதார மேதென்றே னுங்கறிவே தானென்றான்
றாதார் மலர்த்தாள்க டந்து. (சங)

யானோ பிறந்தேனும் யானோ விறந்தேனும்
யானோ மறந்தேனு மென்வாழ்வே - யூனமிலா
வுன்னுள்ளே யானு முலாவவே நீநிறைந்திட்
டென்னுள்ளே நின்றனையா லே. (சச)

பட்டதே மூலவினை பாறிற்றே யேறுவினை
விட்டதே யிவ்வுடலின் மிக்கவினை - நட்டதே
சிற்றறிவிற் பேரறிவு சிற்றம் பலநாடி
பொற்கழல்வைத் தாட்கொண்ட போது. (சரு)

ஊட்டி யுறக்கி யுணர்த்தி நடத்தியெனைக்
காட்டி யறிவிற் கலப்பித்துத் - தேட்டமறத்
தந்தான்சிற் றம்பலவன் சண்பைந் தவராசன்
வந்தா னிதற்கோ மகிழ்ந்து. (சசா)

நின்றநிலை தானோ நிலையுற் றதற்குள் நீபிரிந்திட்
டொன்றும் விகற்பித் துணராதே - யென்றான்
றிருமருவு பாழிநகர்ச் சிற்றம் பலவன்
மருமருவு தாடலைமேல் வைத்து. (சஎ)

நீங்காம லென்னைவழி னிறைந்து நின்றருள
நீங்கா வுடனுமாய் நின்றேனை - யாங்காண
வந்திருந்த சிற்றம் பலநாடி வாய்த்தசுகந்
தந்திருந்து மிப்படியோ தான். (சஅ)

பார்த்தபொழு தெல்லாம் படுபிணமென் றிவ்வுடலைப்
பேர்த்தறிவில் வைத்த பெருமானே - சேர்த்தபுகழ்
மெய்கண்ட நாதனே வெங்குருச்சிற் றம்பலவா
மைகண்ட துன்வடிவே காண். (சகூ)

தானே யெனைவிரும்பித் தானே சமைந்தருளித்
தானே யெனையாண்ட தம்பிரான் - றானே

தனக்கினிய சிற்றம் பலநாடி தாள்போ
லெனக்கினிமை யுண்டோ வினி. (௫௦)

போதாதோ விப்பிறப்புப் போந்தக்காற் போந்தபய
னாதாந்தச் சிற்றம் பலநாடி - வேதாந்தத்
தந்தத்தே வைத்தருள வப்போதே வந்தநிலை
சிந்தைத்தே யாகுஞ் சிவம். (௫௧)

அறிவு சதுவிதங்க ளான்மாக்கள் மூன்றும்
வெறிமாயை கான்கின் விதம்விட்டுப் - பிறியாத
தீவினைக டானறியச் செப்புசிற் றம்புலவா
மேவுபுகழ் வெங்குருவாழ் வே. (௫௨)

என்றவுடற் கன்மமா யின்னாத சஞ்சிதமா
யான்றுவரு மாசினையு மாறாது - தோன்றியிடுந்
தீவினையார் நல்வினையார் சிற்றம் பலநாடி
தூவினையார் போனார் தொலைந்து. (௫௩)

நாதாதி வாக்காதி நான்குதரு மக்கரங்கள்
தாதாரு மந்திரங்கள் சாத்திரங்கள் - போதவே
தந்தருணா மாமாயை சண்பைச்சிற் றம்பலவன்
வந்தருளப் போனவான் மாண்டு. (௫௪)

பார்க்கிற் பரமசுகம் பாரா விடவுலக
நீர்க்கிரத நின்ற நிலைபோல - வேர்க்க
வுரைத்தான்சிற் றம்பலவ னொண்பா ழியர்பெருமான்
[illegible]ரத்தான் கரையாக் கனம். (௫௫)

ஞாதான வுள்ளுணர்வுந் தொல்லையிரு ணாணவமும
வேதாவு மாலுமாய் விட்டதே - நாதாந்தச்
சிற்பரமாஞ் சிற்றம் பலநாடி தேசிகர்கோன்
றற்பரன்வந் தாண்டதற்பின் றான். (௫௬)

பாவி படுமனமே பாவிநீ பஞ்சமலந்
தாவிச் சடந்தவிராச் சண்டாளா - வோவாம
லன்றே யறிவா யகண்டபரி பூரணமாய்
நின்றே யழுந்திலையே நீ. (௫௭)

நீயே பகையுனக்கு நில்லா வுடலுலகப்
பேயே யுறவாகப் பேணினையே - தூய
வறிவுக் கறிவா யகண்டமாய் நீங்காச்
செறிவுக்கு நில்லாமற் சென்று. (௫௮)

றற்றிரங்கு மாபோ லுறும்பெர்ருள்ச ணுற்றவர்கள்
மற்றுயிர்க்கு நின்றிரங்கு மாறு. (கங)

மெய்யுறவோர் ஞானம் விளைந்தோர் சிவபூசை
செய்யுமதே னொனிலது செய்தாலு - மையமறத்
தன்செயலே யாகி ... றரும்பதமே முத்தியரன்
றன்செயலே யாகிடு தான். (கச)

முற்றக் கடைந்தவெண்ணெய் மோரிற் கிடந்தாலும்
பற்றியதிற் கூடாப் பரிசுபோ - லுற்றுடலே
கண்ணாகி நின்றாலுங் காதலுயிர் முத்தரருட்
கண்ணாகி நிற்பர் ... ன்று. (கரு)

... ந்தாத வாரி நடுநின்றுஞ் சேராத
செந்தா மரையிலையின் செய்திபோற் - சந்ததமுந்
தப்புறவே சுற்றமுடன் றங்கிடினு மெய்யுணர்ந்தோ
ரப்புறமாய் நிற்பா ரகன்று. (கசு)

ஏதுடுத்தே னேதணிந்தே னேதந்தொழிலிற் புக்குழன்றேன்
மாதருடன் கூடி மணந்திடிலென் - போதமுற
நாடினருக் குண்டாலு நாட்டமற ஞானநெறி
கூடினருக் குண்டோ குறை. (கஎ)

உண்டுறங்கிப் பூசி யுடுத்துமுடித் துப்பூண்டு
கண்டுரைத்துக் கேட்டுக் கலவிநலங் - கொண்டுசெயல்
வேண்டாத தொன்றுமில்லை வேண்டியதொன் றில்லையென்னை
யாண்டா னடிசேர்ந் தவர்க்கு. (கஅ)

உள்ளும் புறம்பு மொருபொருளாய் நின்றவர்கண்
மெள்ள விளையவுறு மெய்ஞ்ஞானக் - கள்ளருந்தித்
துங்கமுறு மின்ப சுகமே வடிவாகிக்
கங்குல்பக லென்றறியார் காண். (ககூ)

பந்தமறத் தாண்ட பரஞ்சோதி மாமுனிவன்
றந்தபர மானந்த சாகரத்தி - லந்தமறச்
சந்ததமு மின்பசுகந் தானு மிருந்ததனை
யெந்தநெறி சொல்வேனி யான் (௧00)

திருச்சிற்றம்பலம்.